# வளரும் கிளர்ச்சி

451





பழகன், எம்.ஏ

# வளரும் கிளர்ச்சி

க. அன்பழகன் எம். ஏ.



புதுவாழ்வுப் பதிப்பகம்
சென்னை

# முன்னுரை

தோழர்களே

நான், சொற்பொழிவாற்ற நேர்ந்த சிற்சில இடங்களில், நமது இன உரிமைக் கிளர்ச்சியின் முன்னாள் வரலாற்றுச் செய்திகள் சிலவற்றை எடுத்துக் கூறிவந்தேன். அதனைச் செவிமடுத்த நண்பர்களில் சிலர், அவ்வப்போது அச் சொற்பொழிவுகளை எழுத்து வடிவில் கொண்டுவரக் கூறினர். அவை ஒவ்வொன்றும் வெளிவருமானால், சில கருத்துக்கள் ஒவ்வொன்றிலேயும் இடம்பெற்று, பலவிடங்களில் திரும்பத் திரும்பக் கூறப்பட்டவை, எழுத்து வடிவிலும் அவ்வாறே இடம்பெற நேருமாதலின்—அம் முறையில் வெளியிட நான் விரும்பவில்லை.

ஒருவாறு தொகுத்து வெளியிடக் கருதினேன் அதற்கேற்ப, 'கிளர்ச்சி' மலரில் 'வளரும் கிளர்ச்சி' என்றொரு கட்டுரை வரைந்தேன். அது மிகவும் சுருங்கியதாயிற்று. சிறிது விளக்கமாக அமையவேண்டும் என எண்ணினேன். அதன் விளைவே, இந்த விரிவான கட்டுரை.

இயக்கத்தின் இளம் பேச்சாளர்களும், புது எழுத்தாளர்களும், இயக்கத்தின் முற்கால, தோற்ற, வளர்ச்சிகளை அறிந்திருப்பதும், இலட்சிய வளர்ச்சியை, அது வளர்ந்த விதத்தினைப் புரிந்துகொண்டிருப்பதும், இடத்திற்குப் பொருந்த, சூழ்நிலைக்கு ஏற்ப, தமது கொள்கையை வலியுறுத்த இன்றியமையாதனவாகும். இந்த ஏடு அதற்குத் துணையாகும் எனக் கருதுகிறேன்.

இயக்கத்தின், பொது வளர்ச்சியைக் கருதியே இது வரையப்பட்டதால், நுண்ணிய செய்திகள் யாவும் இதில் இடம்பெறக் கூடவில்லை. அதனைப் பொறுக்க விழைகிறேன்.

க. அன்பழகன்

# பதிப்புரை

அன்புடையீர் !

தோழர் அன்பழகன் அவர்கள் 'கிளர்ச்சி' மலரில் எழுதி வெளியிட்ட "வளரும் கிளர்ச்சி" என்ற கட்டுரையை வெளியிடக் கருதினேம். அது மிகவும் சுருக்கமாக இருப்பதால் விரித்து எழுதினுல்தான் பயன் மிகும் என்று கருதினர் அவர். அவ்வாறே, நமது இலட்சிய வளர்ச்சியை, எவரும் எளிதில் புரிந்துகொள்ளும்படி, தக்க விளக்கங்களோடு விரிவாக எழுதியுள்ளார் இதனை.

அவரது சொற்பொழிவில், பலவிடங்களில் கூறப்பட்டவை இதில் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளன. திராவிட இனத்தின் விடுதலை முழக்கத்தின் சுருக்கமான வரலாறு என்றே இதனைக் கூறலாம். திராவிட மக்கள் ஒவ்வொருவரும் இதனைப் படித்து உணர விரும்புகிறோம் !

புதுவாழ்வுப் பதிப்பகத்தின் இரண்டாவது வெளியீடாக, இதனை வெளியிடும்படி அளித்த தோழர் க. அன்பழகன் எம். ஏ. அவர்கட்கு நன்றி உரித்து.

பதிப்பகத்தார்.

# வளரும் கிளர்ச்சி

நமது தாயகம் சார்ந்துள்ள இந்தியத்துணைக் கண்டம் அந்நிய ஆதிக்கத் தளையுண்டு அடிமைப் பட்டுச் செயலற்றுக் கிடப்பதைக் கண்டறிந்து கவலைகொண்ட தலைவர் பலர் உரிமை வித்து ஊன்றலாயினர் சென்ற நூற்றாண்டின் இறுதியில்.

ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து அலை கடலைக் கடந்து வந்து கரையேறிய வெள்ளையர், சோப்பும் சீப்பும் கண்ணாடியும் காகிதமும் விற்பனை செய்து வயிறு பிழைக்கவந்த வெள்ளையர், பிறந்த நாட்டில் பிழைப்புக்கு இடமின்மையால் வேற்று நாடு தேடி நுழைந்து வாழ்வு தேடிய வெள்ளையர், கரையேற—வயிறு பிழைக்க—வாழ்வு தேட இடமளித்த அந்நாட்டையே தமது வேட்டைக் காடாகக் கருதலாயினர். அவர்களின் நுழைவுக்குத் தடைவிதிக்காத நாடோ, தனது உரிமை வாழ்வை இழந்த ஏமாளி நாடாகவும், அவர்களின் சுரண்டல் கொள்ளைக்கு இடந்தரும் சுரணையற்ற நாடாகவும் மட்டுமன்றி அவர்கள் ஆட்சிக்கு அடங்கியும் ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட்டும் நடக்கும் முழு அடிமை நாடாகவும் ஆகிவிட்டது.

இயற்கை நலமும் வளமும் கொழிக்கும் இந்த இந்தியத் துணைக் கண்டத்தை, புராண காலமுதல் புண்ணிய பூமி, பாரத நாடு, ஆரியா வர்த்தம் என்றெல்லாம் பெருமை பேசப்படும் இம் மண்டலத்தைத்தான் அந்நியர்கள் அடிமைப்படுத்தி, அல்லற்படுத்தி, அடக்கு முறைகளை வீசி, சிறைச் சாலைகளை நிரப்பிச் சித்திரவதை செய்து, சிங்காரச் சிம்மாசனத்தில் தாமேறி அமர்ந்துகொண்டு சுரண்டல் ஆட்சியை நிலைநிறுத்துவாராயினர். நாட்டு மக்களோ, நாளும் நலியலாயினர், மெல்ல மெல்ல மடியலாயினர்; வாழ்வு வாதையாயிற்று; வேதனை வெள்ளமாயிற்று. மக்கள் மனம் வெள்ளத்தில் சிக்கிய சிற்றுயிராயிற்று.

பின்னர் நாளடைவில், மக்கள் உள்ளம் உறுதிபெற லாயிற்று, உரிமை உணர்ந்து குமுறலாயிற்று. அந்தக் குமுறலின் பயனுகவே மாற்ருரை வெளியேற்றும் மகத்தான உரிமைப் போரும் தொடங்கப் பெற்றது.

உரிமைப்போர் முதலிலேயே வெளிப்படையாகப் பெரும்போராகத் தோன்றிவிடவில்லை. சிறுசிறு நலன்களைப் பெற விரும்பி அவைகளை அரசாங்கத்திற்கு விண்ணப்பிக்கும் அரும்பாகிச், சிலபல ஆண்டுகளில் பதவிகளில், ஆளும் பீடத்தில் பங்கு கேட்கும் போதாகிப், பின்னும் சில ஆண்டுகளில் நாட்டுக்குச் சுய ஆட்சி வேண்டும் என்று அறிவிக்கும் மலராகி, இறுதியாகவே 'விடுதலை' மணம் வீசுவதாயிற்று. உரிமை வேட்கை முதற்கண் சிறு பொறியாகத் தோன்றி, தலைவர்களின் தொண்டாலும் வீரர்களின் தியாகத்தாலும், வளர்ந்து வளர்ந்து பெருந்தீயாயிற்று.

இருநூற்றைம்பது ஆண்டுகட்கு மேல், இடங்கொண்டு நிலைபெற்று வளர்ந்து வந்த கிழக்கிந்தியக் கம்பெனியார் ஆட்சிக் காலத்தில் 1857-ஆம் ஆண்டில் சிப்பாய்க் கலகம் நடைபெற்றது. கலகம் கலக்கத்தை விளைவித்தது. கலக்கம் ஆட்சிப் பொறுப்பைக் கைமாற்றியது. 1858-நவம்பரில் ஆங்கிலப் பேரரசி விக்டோரியா அவர்கள், இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். எனினும், அந்நிய ஆட்சியைப் பற்றிய வெறுப்புணர்ச்சி வேர் விட்டு வளரத்தான் செய்தது.

1885-ஆம் ஆண்டில்தான், இந்திய தேசியக் காங்கிரஸ் பிறந்தது. அதற்கு மூலமாக இருந்து தோற்றுவித்தவர் ஹ்யூம் என்ற வெள்ளையரே யாவர். தாதாபாய நௌரோஜி முதலான பல தலைவர்களின் உழைப்பாலும் ஊக்கத்தாலும் 'காங்கிரஸ்' இயக்கம் தவழலாயிற்று. சுமார் 35 ஆண்டுகள் உருண்ட பின்பே மாராட்டிர தலைவர் லோகமான்ய பால கங்காதர திலகர், பஞ்சாப சிங்கம் லாலா லஜபதிராய், வீரர் பிபின் சந்திர பாலர் முதலிய பெருந்தலைவர்களின் வீர முழக்கங்களினுல் விடுதலை

இயக்கமான காங்கிரஸ் மக்கள் ஆதரவு பெற்றுப் பல கிளர்ச்சிகளிலும் ஈடுபடலாயிற்று.

அக்காலத்தில், தென்னாட்டில் அந்த உரிமை வேட்கையை வளர்த்து ஆர்வத்தீயை மூட்டி, விடுதலை ஒளியைப் பரப்பிய பெருமை, தென்னாட்டுத் திலகரெனத் திகழ்ந்த தூத்துக்குடி வீரர், கப்பலோட்டிய தீரர், வைதீக வைரி, தண்டமிழ் அறிஞர், வ. உ. சிதம்பரனார் அவர்களுக்கே உரியதாகும். விடுதலை வீரர், தேசியக் கவி, சுப்பிரமணிய பாரதியாரின் கவிதைகளும், சுப்பிரமணிய சிவா முதலிய பல பெருமக்களின் தொண்டும், விடுதலை இயக்கத்தின் வளர்ச்சிக்குத் துணையாயின.

பின்னர், அறிவுக் களஞ்சியம் அன்னிபெசண்ட் அம்மையாரின் தலைமையில் சுய ஆட்சி இயக்கம் (Home Rule Movement) சிறப்பாக நடைபெற்ற காலத்தும், அடுத்து, காங்கிரஸ் இயக்கம், உத்தமர் காந்தியடிகளின் தலைமையினை ஏற்று, ஒத்துழையாமை முதலிய போராட்டங்களை நடத்திய காலத்தும், தென்னாட்டில் விடுதலை இயக்கத் தொண்டு புரிந்தவர்களிலே மிகவும் முக்கியமான இடம் பெற்றிருந்தவர்களே-தமிழ்த் தென்றல், திரு. வி. க. திரு. ஈ. வே. ரா., டாக்டர். வரதராசலு ஆகியோர் ஆவர். அம்மூவருமே, நாயக்கர், நாயுடு, முதலியார் என்று சேர்த்தே வழங்கப்பட்ட பெருமைக்குரியோராவர். அவர்களுடன் தலைவராக மயிலை சீமான் சீனிவாசய்யங்காரும், சந்தர்ப்பத் தொண்டராக சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியரும் பணிபுரிந்து வந்தனர்.

முதலாவது பெரும்போர் உலகப் போக்கையே மாற்றியது. அதனால் ஏற்பட்ட சூழ்நிலை மாற்றத்தாலும், நாட்டு மக்களின் விழிப்புணர்ச்சியாலும், விடுதலை இயக்கத்திற்கு ஆதரவு பெருகிற்று. ஒத்துழையாமை இயக்கம், உப்பள மறியல், (சத்தியாக்கிரஹம்) கள்ளுக்கடை மறியல் முதலிய கிளர்ச்சிகளால் பாமரர்களின் கவனமும் திரும்பியது. கதர் நூற்பு, கதருடுத்தல் முதலிய திட்டங்கள், காங்கிரஸ் தொண்டர்களின் கடமை உணர்ச்சியையும், கட்டுப்பாட்டையும் வளர்த்தன. உத்தமர் காந்தியடி

களின் உண்ணு நோன்பு, சிறை நுழைவு முதலிய தியாகத்தாலும் அகிம்சை நெறியின் உயர்வாலும், காங்கிரஸ் இயக்கத்தில் மக்கள் அளவற்ற நம்பிக்கை கொள்ளலாயினர். மக்களே காங்கிரஸ், என்று கூறும் நிலை பிறந்தது. இந்தியத் தலைவர்களின் மதிப்பு உலகத்தின் கண்களில் உயரலாயிற்று. உலகிலேயே, உத்தமர் காந்தியார் உயர் புகழுக்கு உரியவரானார்.

இங்கிலையில் இரண்டாவது உலகப் பெரும்போர் மூண்டது. இந்தியா—தனது உரிமைக் குரலை உயர்த்தியது. வங்க வீரர் சுபாஷ் சந்திர போஸ், பண்டித நேரு போன்ற எழுச்சியுள்ள தலைவர்களின் தீவிரச் செயல்கள் உணர்ச்சி பொங்கச் செய்தன. அதன் விளைவாக ஆகஸ்டு கிளர்ச்சி விளைந்தது. கிளர்ச்சியின் வடிவமும் தரமும் — பலவாகும். எனினும், இந்தியாவின் விடுதலையை இனியும் தாழ்த்தாது, உரிமையை உடனடியாக வழங்குவது அவசியம் என்ற ஒருமித்த கருத்தை உலகில் நிலை நிறுத்திற்று. நியாயமும், நீதியும் மட்டுமே யன்றி, அதற்கு அவசியமும் ஆதரவும் பிறந்தன. இந்தியாவின் மனக்கொதிப்பை, எதிர்ப்பு வெப்பத்தை நக் குளிர் நாட்டினராகிய ஆங்கிலேயர் தாங்கமாட்டா தாராயினர். ஆட்சிப்பீடம் அசையத் தொடங்கியது. ஆங்கிலேயரின் புகழ்மிக்க ஆட்சித் தந்திரம் (இராச தந்திரம்) ஆடும் நாற்காலியில் அமர்ந்திருந்து கவிழ்வதை விட, ஆடாத முக்காலியில் உட்கார்ந்து கொள்வது மேல் என்று தீர்மானித்தது. அவர்களது தந்திரம், ஆட்சிப் பீடத்தை விட்டுக் கொடுத்தேனும் — வாணிப இலாபத்தைக் காத்துக்கொள்ளத் தூண்டியது. காலத்திற்கேற்ற கோலம் கொண்டனர். விடுதலையைத் தேடியவர்கள் பெற்ற அளவு புகழை, விடுதலையை அளிப்பதாலேயே தாமும் பெற்றுக் கொள்ளத் தீர்மானித்தனர்.

விடுதலைக் கிளர்ச்சியோ, பலப்பல ஆண்டுகளாகப், பல்வேறு தலைவர்களைக் கொண்டு, பலவித கட்டங்களைத் தாண்டி, பல்லாயிரவரைப் பலி பீடத்திலே சாய்த்து இறுதியில் வெள்ளையரை வெளியேற்றக் காரணமாயிற்று. இத்

துணைக்கண்டத்தின் வரலாற்றில், வெள்ளையர், நுழை வால் படிந்த கறை, 1947-ஆம் ஆண்டில்தான் துடைக் கப்பட்டது. நமது மண்ணிற்கு, ஆங்கிலேயர்களின் ஆதிக்கப் பட்டாளத்தினின்றும், விடுதலை கிடைத்து விட்டது என்பது உண்மைதானே ?

மேலும் அந்த விடுதலையோடு மற்றொரு விடுதலையும் இணைந்து பூத்ததும் கண்கூடு. இஸ்லாமிய இனத்தவர், தாம ஒரு தனி மதத்தவர் ஆதலால், இந்துக்களின் ஆதிக்கத்தில் தமது உரிமை வாழ்வு நசுக்கப்பட்டு விடும் எனக் கருதி, தமக்குத் தனி உரிமைகள் வழங்கும்படி அர சாங்கத்தைக் கேட்கலாயினர். சில பல ஆண்டுகளில், முஸ்லீம் லீக் என்ற தமது அரசியல் கட்சித் துணைகொண்டு அரசியல் மேதை ஜனாப். ஜின்னா அவர்கள் தலைமையில் "இஸ்லாமியராகிய நாங்கள், இந்தத் தரணியைத் தனித்து ஆண்டமரபினர். எனவே, எமது உரிமைகளை (இந்துக்களி டம்) இழக்கச் சம்மதியோம். எம்மை ஆளும் உரிமை எமக்கே!" என்று கூறித் தனியாட்சி, தனி நாடு கேட்க லாயினர்.

முதலில் வலிவு பெறாத அவ்வியக்கம், மிக விரைவில் இஸ்லாமியரின் ஒருமித்த ஆதரவைப் பெற்று 'பாகிஸ தான்' தனியாட்சிக் கோரிக்கையை வலியுறுத்தலாயிற்று. இந்து—முஸ்லீம் பிளவும், வேற்றுமையும், பகையும் பெருகாமல் குறைய—உத்தமர் காந்தியடிகள் எவ்வளவோ பாடுபட்டார். என்றாலும், உண்மையும், சூழ்நிலையும் வேறாகவே வளர்ந்தன. அந்நிலையில் அதுகாறும் காணப் பட்ட புகைச்சல், நெருப்பையே வெளிப்படுத்தலாயிற்று. தீமைகள் வளர்ந்தன; கலகம் பெருகிற்று.

முதலில், 'பாகிஸ்தான்' பிரிவினையால் விளையக்கூடிய தீமைகளையே எண்ணி, எடுத்துக்கூறி, அவ்வியக்கத்தை ஒடுக்க நினைத்த தேசியத் தலைவர்கள்; இறுதியில், அதற் குத் தாம் இசையாததால் ஏற்படும் தீய விளைவுகளை எண்ணிப் பார்த்து, பாகிஸ்தான் தோன்ற இசைவளிக்க முன் வந்தனர். அந்த இன உரிமைக் கிளர்ச்சியை மதித்து பாகிஸ்தானுக்கு இசைவளித்த போதுதான், இந்தியா வின் விடுதலையும் உடனடியாக உறுதி பெறலாயிற்று.

உத்தமர் காந்தியின் எண்ணம் வெற்றி பெற்ற அதே வேளையில் வீரர் ஜின்னாவின் 'கனவும்' நினைவாயிற்று. 'பாரத்' பிறந்தது, பாகிஸ்தான் முளைத்தது. உரிமை உணர்வு பிறப்பித்த விடுதலைக் கிளர்ச்சி, இடத்தின் (இந்தியா) விடுதலையாக மட்டுமன்றி இனத்தின் (பாகிஸ்தான்) விடுதலையாகவும் பூத்தது, வாழ்கிறது.

இத்துணைக்கண்ட மக்கள் இதுகாறும் படித்து வந்த வரலாற்று ஏடுகளின் இறுதிப்பக்கத்தில் இடம்பெற்றிருந்த அடிமைத்தனம், அரசியல் தளை அகன்றது. ஆளும் குழுவும் மாற்றமடைந்தது. ஆனால் அத்துடன் அடிமைத்தனம் முற்றும் நீங்கிவிட்டதாகவோ, முழு விடுதலை கிடைத்துவிட்டதாகவோ எவரும் கூற முடியாது. மக்கள் நிலையில் ஏற்றம் விளையாததையும், மாறாகத் துன்பமும் துயரமும் இன்று வரை நீங்காததோடு நாளும் வளர்வதையும், காணும் எவர்தான், 'விடுதலை கீதம்' பாடி ஆறுதல் கொள்ள முடியும். "சுதந்திர நாள்" கொண்டாட்டத்திற்கென எரிக்கப்படும் விளக்கொளி எவ்வளவு காலந்தான் மக்கள் கண்ணொளியை மங்கச் செய்து உண்மையை மறைக்க முடியும் ?

எனவேதான் கருத்துள்ளோரும் கவலையுடையோரும், மேலும் மேலும் வரலாற்று ஏட்டைப் புரட்டுபவராகின்றனர். ஏடு, இறுதிப்பக்கத்தினின்றும் புரட்டப்படுகின்றது. வரலாறு, முன்னாள் ஏற்பட்ட அடிமைத்தனம், இன ஆதிக்கம், மத முடக்குவாதம், முதலிய அனைத்தையும் அறிவுடையார்க்குப் புலப்படுத்துகின்றது. இந்த உண்மைகளை, நமது இழிவுக்கும் தாழ்வுக்கும் காரணமாக உள்ள நிலைமைகளைத் தென்னாட்டுத் தலைவர்கள், பற்பலவாண்டுகட்கு முன்பே கண்டுணரலாயினர்.

தென்னாட்டவர், தட்சிண பீடபூமி, பஞ்ச திராவிடம் என்றெல்லாம் குறிப்பிடப்படும் பகுதியில் வாழ்ந்துவரும் மக்கள், பல நூற்றாண்டுகளாகவே வேற்றினத்தவரான வடவர் ஆதிக்கத்தில் சிக்கிச் சிதைந்து நிலைகுலைந்து தாழ்ந்து வந்துள்ளனர் என்ற வரலாற்று உண்மை சிறிது சிறிதாகத் தெளிவாகத் தொடங்கியது.

* * *

அன்ருெருநாள், இமாலயத்தில் உருத்திரன் பார்வதியை மணங்கொண்டபோது, அத்திருவிழாவைக் காணத் திரண்ட பெருங்கூட்டத்தினரால், வடக்கு தாழ்ந்து தெற்கு உயர்ந்ததாம். தெற்கைச் சமஞ்செய்ய உலக முதல்வன், குறுமுனி என வழங்கும் அகத்தியனைப் பொதிகை மலைக்குப் போயுறையும்படி அனுப்பிவைத்தானும். அந்தப் புராணக் கதை பிறந்த நாள் முதலாகவே தெற்கு உயராதபடி வடக்கு கவனித்து வந்திருக்கிறது என்பது விளக்கமாயிற்று.

புராணக் கதைகளின் போக்கிலே உள்ள குறைகளை நீக்க அவற்றிற்குத் தத்துவப் பொருள் கூறுவது வழக்கம். அதுபோன்றே, இந்த அகத்தியர் வருகைக்கான காரணங் கூறும் கதைக்கும் உட்பொருள் காண்போமேயானுல் ஒருண்மையும் தெளிவாகும்.

அக்காலத்தில், தென்னுட்டில் வாழ்ந்த மக்களும், மன்னரும் வடக்கிலும் செல்வாக்குடன் புகழ்பெற்று விளங்கினர். அந்நிலையில், வடக்கில் நிகழ்ந்த அப்பெருமணத்தில் திரண்ட வடவர், தமது நாடும் மொழியும் தெற்கின் பெருமைக்குத் தாழ நேருகிறதே என்று கருதிக் கூடிச் சிந்திக்கலாயினர். அதன் முடிவாகத், தெற்கு தனது மொழி, கலை நாகரிகப் பெருமையாலேயே வடக்கைத் தாழச் செய்வதால், அதன் பெருமையைப் போக்கும் முறையில் வடவரின் மொழி கலை நாகரிகத்தைத் தெற்கில் புகுத்தி, அதன் மூலம் வடக்கினைத் தாழாமல் உயரச் செய்யவே, கலைக்கடலெனப் பெயர்பெற்ற அகத்தியனை அனுப்பிவைக்கத் தீர்மானித்தனர். ஓர் இனத்தை வெல்ல விரும்பினுல், அந்த இனத்தின் மொழியையும் கலையையுமே முதலில் அழிக்கவேண்டும் என்ற கருத்தினை அக்காலத்திலேயே கண்டனர் போலும் வடவர்! அந்த அகத்தியரும், கலை வளமும் நாகரிக நலமும் நிரம்பிய தென்னுட்டிற்குச் செல்கிருேமே, அவர்தம் மொழியை அறியாது எப்படித் தம் கருத்தைப் பரப்புவது என்றெண்ணி, இறைவனை வேண்டித் தமிழ் அறிந்தனர் போலும். வாணிபத்திற்குப் புறப்படுபவன், செல்லும்

நாட்டினரின் மொழியை ஓரளவேனும் அறிந்திருப்பது அவசியமன்றோ? அதுபோன்றே, அகத்தியரும் தமது கலை நாகரிக வாணிபத்துக்குத் தமிழறிவும் பெற்றுப் புறப்பட்டார். தக்க படைக்கருவியோடு வந்த அம்முனி தெற்கை நாளடைவில் தாழச்செய்ததும் வியப்பாமோ?

தேவர்க்குச் சார்பாகப் பூலோகத்திற்கு வந்து தமது கருத்தை எப்படியோ முடித்துக்கொள்ளும் புராண நாரதரைப் போன்றே, தெற்கே வந்த அகத்தியரும் வெற்றி பெற்றிருக்கக் கூடும்.

தெற்கைத் தமது வீரத்தால், படைபலத்தால், போரால் வெல்லமுடியாது; அவ்வகையால் தெற்கே வெல்லும், உயரும் என்பதைக் கண்ட வடவர், தம் மொழி கலை மதக் கொள்கைகளால், வேதாகம சாஸ்திர புராண மகிமையால், சாதி ஆச்சார புரோகித தர்மத்தால்— அவைகளைப் புகுத்துவது மூலம் வெற்றிபெறக் கருதினர் போலும். உண்மைச் சிறப்பால் வெற்றி பெருவிடினும், வஞ்சகமாகவாவது வீழ்த்தத் தீர்மானித்தனர். அதன் விளைவே—அகத்தியர் புறப்பாடு.

கைலையினின்றும் புறப்பட்ட அகத்தியர் கலை கொண்டு வந்தார். பொதிகையில் தங்கினார். சிறிது சிறிதாகச் செல்வாக்குப் பெற்றார். அகத்தியர் பலராயினர். தமிழர்கள் தாமாகவே தாழ்வினை மேற்கொள்ளும் சூழ்நிலை பிறந்தது.

அகத்தியருக்குப் பின், அயோத்தி இராமன் வந்தான். காட்டிலே தாடகையைப் படுகொலைசெய்தான், சூர்ப்பநகையை மானக்குறைவு செய்தான், வாலியை வஞ்சகத்தால் மாய்த்தான், தென் இலங்கைக்கு எரி மூட்டினான், அரக்கர் குலத்தை இரக்கமின்றி அழித்தான், வீபீஷணர்களையும் அனுமார்களையும் (சுக்கிரீவர்களையும்) தோற்றுவித்து, தெற்கையே வடக்கிற்கு வணங்கச் செய்தான்.

இதிகாசத்தின் குறிப்பின்படி, இராமன் வந்தான். புராணக்கதைகளினாலும், கற்பனைகளினாலுமோ, இராமனொடு கிருஷ்ணன் வந்தான், அவதாரங்கள் வந்தன,

விநாயகர் வந்தார், — அவற்ருேடு தொடர்புடையன பலவும் இங்குக் குடியேறின. தமிழர்களின் வாழ்வில், வடவர்தம் செல்வாக்கைப் பெருக்கத்தக்க கற்பனைகள் பலவும் உண்மையைப் போன்றே இடம்பெறலாயின.

எவ்வாருே பழங்கதைகளெல்லாம், உண்மைக்குப் பொருந்தினும் பொருந்தாவிடினும், வடவரே ஆற்றல் மிக்கோராகச் சித்தரிக்கப்பட்டுள்ளனர். அவ்வெண்ணம் தமிழ்மக்களின் கருத்திலே உறைந்து நாளடைவில் நம்பிக்கையாகவே நிலைக்கலாயிற்று.

என்ருலும், தமிழ்மக்கள் தனிப்பெருமையுடைய வீரமரபினர் என்பதும் அவர்களது மொழி, கலை, நாகரிகம் யாவும் மிகவும் உயர்ந்தன என்பதும், பண்டைக்கால முதலாகவே தமிழ்ப்பெருமக்கள் பலராலும் பலவகையானும் நிலைநாட்டப்பட்டுள்ளன.

இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று அறுதியிட்டு உரைக்கப்படும் "தொல்காப்பியம்" தமிழரின் மொழி, கலை, நாகரிகங்களின் தனிப்பெருமையை விளக்கும் திருவிளக்காகவே அமைந்துள்ளது. வடவர் மொழியும் கலையும் உயர்ந்தது என்ற எண்ண இருள் சூழாதபடித் தொல்காப்பியம் ஒளி பரப்பியது.

தமிழ் அறத்தோடு, வடவர் கொள்கையும் மயங்கத் தொடங்கிய பொழுதே, தமிழ் நெறியின் தனிமாண்பை நிலைநிறுத்தும் வகையில், 'திருக்குறள்' நில்வு தோன்றியுள்ளது. இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்குக் குறையாது முற்பட்ட அறமாகிய திருக்குறள், வேதாகம சாஸ்திரங்களின் சார்பில், ஆரியதர்மங்கள் என்ற பெயரில் புகுந்த பல அநீதிகளை, (அவற்றைக் குறிக்காமலே) வீழ்த்தி தமிழ் அறநெறியினை நிறுவி, தமிழர் வாழ்வுக்கு அரண் செய்தது என்பது மிகையாகாது. திருக்குறளே இன்றும், தமிழுக்கும் தமிழர்க்கும் உரிய அரணாக தமிழ் வீரர்க்குக் கிடைத்துள்ள கேடயமாக அமைந்துள்ளது தெளிவு.

சங்க காலத்திற்குப் பின்போ, தென்னுடு கைக்கொண்டிருந்த சிவ(லிங்க) வழிபாட்டினை அடிப்படை

யாகக்கொண்டு, சைவசமய அமைப்பை உண்டாக்கி, அதன் மூலம் வடவர் கொள்கைகள் பல புகுத்தப்படு வதைக் கண்டு, அந்த மூடக்கொள்கைகளை நீக்கித் தூய்மை செய்யும் வகையில், திருமூலர் திருமந்திரம் தோன்றியுள்ளது.

அதுவேயுமன்றி, தமிழ் நாட்டில் தோன்றிய சித்தர் கள் பலரும், வடவர் கொள்கைகளை, உண்மை உணராத தமிழர் ஏற்பதை விலக்க, முயற்சி செய்துள்ளனர். அவர்கள், தாம் சிந்தித்துக் கண்ட முடிவுகள் பலவற்றை யும் தமது பாடல்க்ளின் மூலம் மயக்க அறிவிஞர்க்கு எடுத்துக் கூறியுள்ளனர். மூடநம்பிக்கைகளையும், பொரு ளற்ற செயல்களையும் கண்டிக்கும் அவரது அறிவுரைப் பாடல்களே அதற்குச் சான்ருவன.

பின்னர், இடைக் காலத்தில் கோவில் வழிபாட்டில் வடமொழி தேவபாடையாய் ஆட்சி செய்யத் தொடங்கிய காலத்து அடியார்கள்—நாயன்மார்களும் ஆழ்வார்களும் —தமிழர்களின் தனிக்கொள்கைகளைக் காவாதுவிடினும், தமிழிலே பக்திச் சுவைமிக்க பாடல்களை ஏராளமாகப் பாடி னர். அப்பாடல்களுங்கூட, தில்லையில் ஒரு சிற்றறையில் மறைத்து மூடப்பட்டுக்கிடந்தன. முதலாம் இராசராசன் என்ற சோழ மன்னன் அவற்றை வெளிப்படுத்த முயற் சித்தனன். அர்ச்சகமரபு தமது தொழில் மேன்மைக்குத் துணையாகும் சமஸ்கிருதப் பற்ருல், அவை வெளிப்படு வதையும் தடுக்க, வஞ்சகமாக இச்சகம் பேசிற்று. அரச னது சூழ்ச்சி அதனை வென்றது. செல்லரித்தவை போக மீதமுள்ள பாடல்கள் வெளிப்பட்டன. மக்களிடையேயும் வழக்குப் பெறலாயின.

சமயச் சார்பில், கதைகளுக்கும் கற்பனை புராணங் களுக்கும் செல்வாக்குத் தோனறியது. அதனுல் வட மொழியிலே உள்ள கதைகள் பலவும் தமிழகத்திலே மதிப்புப் பெறலாயின. அதன் மூலம் வடமொழி யின் செல்வாக்கு மேலும் வளருமெனக் கருதினர். எனவே தமிழ் மொழியில் அப்படிப்பட்ட கதைகளை (காவி யங்களை) இயற்றத் தொடங்கினுர்கள் புலவர்கள். அவை

பல திறப்பட்டன. அவற்றுள் சில மொழிவளங் காட்டவும், சில தமிழர் நெறி புலப்படுத்தவும், பல சமயக் கருத்துப் பரப்பவும் தோன்றியுள்ளன.

வடமொழியில் வரையப்பட்ட ஆதிகாவியங்களான, வான்மீகி இராமாயணமும், வியாச பாரதமும் புகழப்பட்ட போதே, தமிழிலேயும் தமிழருக்குப் பெருமைதரும் காப்பியம் உண்டு என்பதை நிறுவ, சேரர் பெருந்தகை இளங்கோவடிகள், தமிழரின் ஒப்பற்ற வீரமும் ஆற்றலும், இணையற்ற நாகரிகமும் பண்பாடும், ஈடற்ற மொழிவளனும் கலைச்செல்வமும் ஒருங்கே விளக்கமுறும்படி, முத்தமிழ் முழங்கும் "சிலப்பதிகாரம்" என்னும் காப்பியத்தை இயற்றித்தந்தனர் போலும்.

அதன் வழியில் தோன்றிய காவியங்களான, மணிமேகலை, பெருங்கதை, வளையாபதி, குண்டலகேசி, சீவக சிந்தாமணி முதலியவை, தமிழ்க் கலை வளத்தினைப் பெருக்கி, மொழிக்கு ஆக்கம நல்கினும், தமிழரின் தனிப் பண்பாட்டைக் காக்கத் தவறிவிட்டன. மதச்சார்புடையன வாகவே அக்காவியங்கள் அமைந்ததால், பொதுமை இழந்து பொய்மை நிரம்பின.

பின்னர், சமண சாக்கியக் கொள்கைகளோடு மாறு கொண்ட சேக்கிழார், தம் மதமாகிய சிவநெறியே உயர்ந்தது என்ற கருத்தைப் பரப்ப, அறிவுக்கு ஒவ்வாவிடினும். பல கதைகளைத் தென்னாட்டிற்கே உரியதாகப் புனைந்து பெரிய புராணமாக இயற்றிவிட்டனர். சிவநெறி செல்வாக் குப் பெற்றது கண்ட வைணவர் தம் மதம் பரவ ஒரு காப்பியம் வேண்டுமென விரும்பினர். கம்பர் இயற்றினார் இராமாயணம். அவரது கவிதை யாற்றல் காவியத்திற்கு மேலும் அழகு தந்தது. ஆனால், இந்தப் போக்கில் காவியங்கள் வளரலாயின; கந்தபுராணம், திருவிளையாடல், வில்லி பாரதம், தலபுராணங்கள் என்று பட்டியல் வளர்ந்தது.

தமிழ் மொழியின் பெருமையை விளக்க இயற்றத் தொடங்கப்பட்ட காப்பியம், சமயத்தையும் புகுத்துவதாக வளர்ந்து, சமயத்திற்காகவே காப்பியம் என்றாகிச் சமயத்

திற்காக சமஸ்கிருத இலக்கியத்தை அப்படியே தமிழில் இறக்கிவிடுவது என்பதாயிற்று நிலைமை. இறுதிக்கட்டம் வரையில் தமிழ் மொழியின் தனிமை (உரிமை) காக்கப்பட வேண்டும் என்ற கருத்து மட்டும் கவிஞர்களிடம் இருந்தே வந்தது.

பிற்காலத்தில் பக்தித் துறையிலே தோன்றிய பாடல் களும் பாசுரங்களுமோ—தமிழரின் வாழ்வுக் கொள்கை களையே கைவிட்டு, வடவரின் வெறுப்புத் துறவைப் போற்றத் தொடங்கின. மண், பொன், பெண்-என்ற இம் மூவாசைகளை ஒழிக்கவேண்டும்: இந்த வாழ்வே பொய், என்ற இத்தகு ஆரியக்கொள்கைகள் செல்வாக்குப் பெரு விடினும, மக்களிடம் பரவலாயின. மண், பொன், பெண் ஆகிய இவற்றிலே, சாதாரண ஆசைகூட அல்ல, பேராசை வைத்திருந்தவர்களேகூட இந்தக் கருத்துக் களைத் தாம் கடைப்பிடித்துள்ளதாகக் கூறி நடிக்கலாயி னர். நடிப்பிலே வளர்ந்த துறவுக் கொள்கைகள் நடிப் பையே வளர்த்தன.

இந்நிலையில், கோவில்களில் வடமொழி மந்திரங்களும் தோத்திரங்களும் வழங்குவதை மக்கள் விரும்பவில்லை என்பதைக் கண்ட சமணரும், பின்னர் வைணவரும் வட மொழியும் தமிழும் சம அளவாகக் கலக்கும்படியான மணிப்பிரவாள நடையைக் கைக்கொள்ளலாயினர். சமய உணர்ச்சி, தமிழை வழக்கிலும்கூடப் பாதி அளவே உயிருடையதாக ஒடுக்கவும் செய்தது. பின்னரே-வைணவக் கோவில்களில் தமிழ மொழிப் பாசுரங்கள் இடம் பெறலா யின. எப்படியோ. அக்கோவில்களிலேனும தமிழுக்கும் இடமளித்தமைக்கு நன்றி செலுத்த வேண்டியதுதான்!

எனினும் சமயவாதிகள், மொழியினைக் கையாண்ட முறைகளால், பலநூற்றாண்டுகளாகவே தமிழ் மொழி கலை நாகரிகப் பண்பாடுகள் குழப்பத்திற்காளாகிவிட்டன. மக்கள் தெளிவற்றவர்களாயினர்.

அன்றொருநாள் தென் குமரி முதல் வட இமயம்வரை பரவிக்கிடந்த தமிழ் மொழி, விந்தியம் வரையில் கூட

நிலைக்க முடியாதபடி வடவர் நுழைவு தமிழைத் தேய்த்தது. பிற்காலத்தில், மேலும் தேய்ந்து வேங்கடத்தோடு ஒடுங்கும்படி, தமிழ் மொழியிலிருந்தே புதுமொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகியவை பிறக்கும்படி வடமொழி தமிழையே பிளந்தது. காலப்போக்கு, நெடுந்தொலைவு, மக்கள் தொடர்பின்மை ஆகியவற்றால், ஒரு மொழி—பலமொழி கிளைக்க இடந்தர நேரும் எனினும் அவை தாய் மொழியினின்றும் அதிகம் விலகிச் செல்வதில்லை. ஆனால் தமிழினின்றும் பிறந்த மொழிகளோ வடமொழித் தொடர்பால் அதிகம் விலக நேர்ந்தன. அவை தமிழொடு கொண்டுள்ள மூலத்தொடர்பு விளங்கினும், வடமொழியின் சார்பாகவே வளர்க்கப்பட்டதால், தமிழொடு மாறுபடும் நிலை பெற்றுள்ளன.

எனினும் அம்மொழி பேசும் மக்களின் பண்பாடுகள் இன்றும் மாறிவிடவில்லை. அப்பண்பாட்டு உணர்ச்சி,-திராவிடமொழி, கலை நாகரிக அறிவுடையார் பலரும் அம்மொழிகளின் பழைய வடிவையே காக்க விழைகின்றனர். மேலும் மேலும் வடமொழி ஆதிக்கம் வளருவதையும் தடுக்க முயற்சிக்கின்றனர். பழைய கன்னடம், தொல் மலையாளம், முன்னாள் தெலுங்கு—ஆகியவற்றைக் கைக்கொண்டு வளர்க்கவும் முயற்சிகள் உள்ளன.

இவ்வாறு, அகத்தியர் காலம் முதலாகவே வடவர் மொழியும் கொள்கைகளும், தமிழர் கலையும் வாழ்வும் அழியக்காரணமாகி வந்துள்ளதையும் அதைத் தடுக்கும் தற்காப்பு முயற்சிகள் பல தொல்காப்பியர் காலம் முதலாகத் தோன்றியுள்ளதையும் நாம் காண்கிறோம். எனினும் அம் முயற்சிகள் முழு அளவு வெற்றி பெறக்கூடவில்லை.

இடைக்காலத்தில், தமிழ் இலக்கிய இலக்கணங்களின் பெருமைகூட ஆரியத்தோடு, அதற்குள்ள தொடர்பாலேயே அறுதியிடப்படும் அளவுக்கு இழிதகவு விளைந்தது. ஆனால், இயற்கை நியதியால் ஆரியம் இறந்த மொழியாயிற்று. தமிழின் அடிப்படைகளை நேராகத் தாக்கித் தகர்க்க அதனால் இயலவில்லை. தம்மொழி வழக்கின்றி இறப்பினுங்கூட ஆரியர் அதைக் கருவியாகக்

கொண்டே, தமிழை அடிமைப்படுத்த, தனித்து இயங்காது முடக்கத் திட்டமிட்டனர். அதற்கு ஒரு படியே மணிப்பிரவாள நடை.

மணிப்பிரவாள நடையோ, தமிழர் செவிக்கு வெறுப்பை விளைவிப்பதாயிற்று. நற்றமிழின் இன்னோசையாம் இசையினை நுகர்ந்த மக்கள், ஏனோ வேற்றுமொழிக் கலப்பால் காது குடையும் வெற்றோசையைக் கேட்க விரும்புவர்? எனவே அந்நடை செல்வாக்குப் பெறவில்லை. மேலும், மதமாறுபாட்டாலும் ஏற்கப்படாது போயிற்று. எப்படியோ தமிழ்நாடு அதன் பிடியில் சிக்குறவில்லை.

ஆரியரோ, தமிழ் சொற்களுக்குப் பதிலாக வடமொழிச் சொற்களைப் புகுத்துவதிலும், தமிழ் நெடுங்கணக்கில் வட வெழுத்துக்களுக்கு இடந்தேடுவதிலும், நற்றமிழ்ச் சொற்கள பலவற்றையும் வட சொற்கள் என திரித்து வழங்குவதிலும் ஈடுபட்டுத் தமிழ்மொழி என்ற எண்ணமே ஏற்படாதபடிச் செய்வதற்கு விடாது முயற்சிப்பாராயினர். இன்றும் அத்திருப்பணி ஓய்ந்தபாடில்லை.

வடவர் கொள்கையாலும், தர்மத்தாலும் புகுந்த மூட நம்பிக்கைகளும், சாதி சமயச்சடங்குகளும் தமிழகத்தையே 'செல்லென' அரித்தன. 'இராமபாணமாக'த் துளைத்தன. அவைகளும் ஆதிநாள் முதலாகவே, மறுக்கப்பட்டு வந்துள்ளன.

அரக்கர்கள் வேள்வியை—யாகத்தைத் தடுத்தனர்; சுராபானம்,—சோமரசம் பருக மறுத்தனர், என்று புராண இதிகாசங்களே உரைக்கின்றன. சங்க இலக்கியங்களில் ஆரியருக்கே உரிய சில பழக்க வழக்கங்கள் தனித்தே சுட்டப்படுகின்றன. தமிழர் வாழ்க்கை அறமாகிய திருக்குறளில், பிறப்பினாலாகிய சாதியும், வேள்வியும் சூதும், கள்ளும் பிற இழிவழக்குகளும் மறுக்கப்படுகின்றன. திருமூலர் திருமந்திரம் — ஆரியர் தம் மாயவாதக் கருத்துக்களை வீழ்த்துகின்றது. சித்தர் பாட்டுக்கள் ஆரியச் சடங்கு முறைகளை, புரோகித உயர்வை வெறுத்து மொழிகின்றன.

பிற்காலத்தில் உரையாசிரியர்களாகச் சிறந்தவர்களில் ஆரிய தர்மத்தையும் ஒப்பிட்டுச் சிறப்பிக்கும் நோக்குடைய பரிமேலழகருங்கூட, ஒவ்வோர் இடத்துத் தமிழர் நெறி ஆரிய தர்மத்தோடு மாறுபட்டு உயர்ந்து நிற்பதை உரைக்கத் தவறவில்லை. பக்திப் பாடல்களுங் கூட ஒவ்வோரிடங்களில், புரோகிதரது இயல்பை இழித்துக் கூறவும் ஆரியரைத் தனித்துச் சுட்டவும் செய்கின்றன. "தமிழன் கண்டாய் ஆரியன் கண்டாய்" என்ற அப்பர் வாக்கு அந்த வேற்றுமைக்கே சான்றும். எனினும் ஆரியத்தின் தீமையைத் தொகுத்துச் சுட்டிக்காட்டி அதை வேரோடு ஒழிக்கும் முயற்சி சென்ற நூற்றூண்டு வரை நடைபெறவில்லை என்றே கூறலாம். வரலாறு வரையப்படாமல், வரலாற்றறிவு வளர்க்கப்படாமல் இருந்த நாட்டில், மக்கள் உண்மையை எப்படி உணர்ந்திருக்க முடியும் ?

ஆரியர் புகுத்திய சாதிப் பாகுபாட்டின்படி, அம்மதத்தின் வேர்களான புரோகிதர்களே நூலறிவு பெறவேண்டியவர்கள், படிப்பதற்குத் தகுதியுடையவர்கள். மற்ற வகுப்பார் படிப்பதே பாபம், தவறு, அதிலும் தமது சூழ்ச்சிகளை உள்ளடக்கிய வேத சாஸ்திரங்களைப் படிப்பதே தண்டனைக் குரியது என்ற கருத்தைப் புகுத்தியிருந்த போது, தமிழ் மக்கள் தம் நிலையைப் புரிந்து கொள்வது எப்படி இயல்வதாகும் ?

எனவே, ஆரியக் கயிறு சுழற்றிவிடும் பம்பரமாக ஆயினர் தமிழர். சுழற்சியால் விளைந்த மயக்கத்தில், உலகம் தம்மைச் சுற்றுவதாக, மாயையில் ஆழ்ந்தனர். ஆரிய மாயை இருளைப் பரப்பியது. கண்கட்டப்பட்டு காட்டிலே விடப்பட்ட நிலைக்காளாயினர். அடிமைப்பட்டதோடு குருடாகவும் ஆக்கப்பட்ட கொடுமையில் சிக்கினர்.

எப்படியோ, ஆரிய ஆதிக்கக்காட்டில் நுழைந்த வெள்ளையர், ஏற்படுத்திக்கொண்ட ஆட்சி முறை, குழப்பம் மிகுந்த காட்டில் ஓரளவு தெளிவு ஏற்படத் துணை செய்தது. கண்கட்டு அவிழ்க்கப்பட, குருட்டுத்தனம் நீங்க அதுவே காரணமாயிற்று. உண்மை சிறிது சிறி

தாகப் புலனாகத் தொடங்கியது. அந்நிய ஆதிக்கத் தீமையினின்றும் விளைந்த நன்மையாயிற்று அது.

ஆங்கிலேயர் ஆட்சித் தொடர்பாலேயே, விஞ்ஞான வளர்ச்சியின் பயன் கிடைத்தது இந்தியாவிற்கு. அதனால் மதவெறியில் மூழ்கிக் கிடந்த பொதுமக்களுங்கூட ஓரளவு தெளிவு பெற வாய்ப்புக்கள் ஏற்பட்டன.

இங்கு வந்து சேர்ந்த பாதிரிமார்களின் தொண்டு தமிழ்மொழியின் பெருமையை உலகுணரச் செய்யக் காரணமாயிற்று. அதனால் தமிழரின் மதிப்பும் சிறிது சிறிதாக உயரத்தொடங்கியது. மேல் நாட்டார் கண்டு பிடித்த அச்சுப்பொறியின் துணையால், பழந்தமிழ் ஏடுகள் பல வெளிவரலாயின. சென்ற நூற்றாண்டில், பாதிரிமார்களாலும், யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலராலும் தமிழ் உரை நடை நூல்கள் இயற்றப்படலாயின. அவை பொது மக்களின் தமிழ் அறிவு வளர்ச்சிக்குத் துணை செய்தன.

தமிழ் நூல்கள் சிலவும், திருக்குறள் அறமும் ஆங்கிலம் முதலிய மேல் நாட்டு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டன. அதனால் தமிழின் புகழ் ஓங்கிற்று. டாக்டர் கால்டுவெல் பாதிரியார், தமிழ் மொழியை, மொழிநூல் முறைப்படி ஆராய்ந்து, திராவிடக்குழு மொழிகளின் தனிச்சிறப்புக்களையெல்லாம் தமது ஒப்பிலக்கணத்தால் நிலைநாட்டினர். தமிழ்மொழி (மதிப்பு) தலை நிமிர்ந்தது.

மேல் நாட்டார் பலர், இந்தியத் துணைக்கண்டத்தின் முன்னாள் வரலாற்றை ஆராய முற்பட்டனர். பெரும்பாலும் அவர்களது கருத்து வடநாட்டிலேயே பதியலாயிற்று. வடமொழிக்கு அவர்களிடம் ஏற்பட்ட செல்வாக்கு, வடமொழி தடையின்றி வளர இடமாக இருந்த வடநாட்டுக்குப் பெருமையளித்தது. இந்திய மொழிகளில், வடமொழியை மட்டுமே கற்றிருந்தமை, வரலாறு எழுதத் தொடங்கியவர்களையெல்லாம், வடநாட்டிற்கே முக்கியத்துவம் அளிக்கச் செய்துவிட்டது. வரலாற்று ஏடுகளில்—தென்னாடு மாற்றாந்தாய்ப் பிள்ளையாகவே கைவிடப்பட்டது. முற்காலத்தில் கடல் கொண்டழிந்த தென்னாடு,

பிற்காலத்தில் ஆரிய ஆதிக்க வெள்ளத்தில் அமிழ்ந்த தென்னாடு, தற்காலத்தில் வரலாற்று வெள்ளத்தாலும் மறைக்கப்பட்டது. ஆயிரம் பக்கங்கொண்ட இந்திய வரலாற்று ஏட்டில் ஒருபத்து இருபது பக்கங்களே தென்னாட்டைப் பற்றிப் பேசப்பட்டிருக்கும், அதுவும் சிறப்பிப்பதாக அமையாது.

இங்கிலேயைக் கண்ணுற்ற, ஸ்மித் என்ற வரலாற்று நூல் ஆசிரியரே, முதன் முதலாக, "இந்தியத் துணைக் கண்டத்தின் உண்மையான பழைய வரலாற்றை அறிய வேண்டுமானால், வரலாற்று ஆசிரியர்களின் ஆராய்ச்சி, கங்கைக்கரையில் தொடங்கப்படுவதற்குப் பதில் காவிரிக் கரையில் தொடங்கப்படவேண்டும்" என்ற கருத்தை வெளியிடலானார். ஆரியர் வருகைக்கு முன்பாகவே வாழ்ந்த திராவிடரின் வரலாறு முக்கியத்துவம் அளிக்கப் படவேண்டும் என்ற கருத்து அதுமுதல் வலியுறலாயிற்று.

திராவிடர் பற்றிய உண்மைகள் பல வெளிவரலாயின. அரசாங்கத்தின் புதைபொருள் இலாக்கா, சிற்பக்கலை ஆராய்ச்சி நிலையம் முதலியவற்றின் பணியினாலும், திராவிட நாகரிகத்தின் தொன்மையும், தென்னாட்டுச் சிற்பக்கலையின் தனித்தன்மையும் வளர்ச்சியும் விளக்கமுறலாயின. திராவிட மக்களின் முகத்தோற்றத்தில், வடிவமைப்பில், குஞ்சியழகில், வாழ்க்கை முறையில், ஒழுக்கப்பற்றில், மொழிவழியில் இலக்கிய நெறியில் உள்ள சிறப்பியல்புகளெல்லாம் ஆராய்ச்சி ஒளியால் தெளிவு பெறத் தொடங்கின. அவை ஆரியத் தொடர்பாலும், கலப்பாலும், ஆதிக்கத்தாலும், புதையுண்ட பொருளாக, தடையுண்ட நீராக, மறைபட்ட ஒளியாக, முடங்கிக் கிடப்பதையும் காண நேர்ந்தது. உண்மையை உரைப்பதில் ஆர்வமுடையோர் அதை வெளியிட்டனர். வேறு நோக்கினர், வேறுமுறையாகவே நடந்துகொண்டனர். என்றாலும் திராவிடத்தின் வரலாறு முற்றும் உருப்பெறாவிடினும் உண்மைகள் பல வெளிப்பட்டதால், தமிழர் மேலும், மேலும் தம்மை உணரலாயினர்.

வரலாற்று ஏடு ஒளி வீசியபோதே, ஆரியர் அந்நியர் என்பதும், அவர் தம்தொடர்பால், வரவால் தமிழர்வாழ்வு தாழ்ந்தது என்பதும் வலுப்பெறலாயின. ஆரியர் வருகைக்குமுன் தமிழர் பெற்றிருந்த வளமான வாழ்க்கையும், வெற்றி நிலையும், அறிவாட்சியும் மக்களுக்குப் புலப்படத் தொடங்கின.

அக்காலத்தில், மூவேந்தர் என்று சிறப்பிக்கப்பட்ட சேர, சோழ, பாண்டியர்கள், வில், புலி, கயல் பொறித்த கொடிகளை உயர்த்தி, தமிழகத்தை எவருக்கும் தலைவணங்காமல் ஆண்டுவந்தனர். அந்தப் பேரரசர்களில் பலர், ஆரியர் அகந்தையை அடக்கியவரும், இமயத்தின் பிடரியில் தங்கொடி பொறித்தவரும், கங்கைக்கரையினில் வெற்றி முரசு முழங்கியவரும், கனகவிசயர் முடித்தலையில் கல்லேற்றிக் கொணர்ந்தவரும், கலிங்கத்தைக் கைக்கொண்டவரும், கடாரத்திலும் காழகத்திலும் வெற்றிக் கொடி நாட்டியவரும், ஈழத்தை வென்றவரும் எனப் பரணி பாடும் பலசிறப்பட்ட புகழுக்கும் உரியவர்களாகத் திகழ்ந்தனர். இவற்றை அறியத்தொடங்கிய தமிழர்களின் தன்னம்பிக்கையும் உரிமை உணர்வும் சிறிது சிறிதாக வளரத்தொடங்கியது.

என்னினும், எவ்வகையிலும் வேறு எந்த இனத்தவரினும் தாழ்வுறாத தமிழர்—திராவிட இனத்தவர், இன்று பலவகையினும் தாழ்ந்துள்ள நிலையை எண்ணலாயினர், ஏக்கமுங்கொண்டனர்.

இந்நிலைக்குக் காரணமான ஆரிய மத மூடநம்பிக்கைகளே முதன் முதல் வெளிப்படையாகக் கண்டிக்கப்படலாயின. சென்ற நூற்றுண்டினிறுதியில் வாழ்ந்த வடலூர் வள்ளலார், இராமலிங்க அடிகளே, பக்தித்துறையில் நின்றபடியே ஆரிய(அ)தர்மத்தை முதன் முதல் கண்டிக்கலானர். அவரது திருவருட்பாவில்,

"நால் வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா
நவின்றகலைச் சரிதமெல்லாம் பிள்ளைவிளையாட்டே
மேல் வருணம் தோல் வருணம் கண்டறிவாரிலை......"

—எனவும்,

"மதித்த சமயமத வழக்கெல்லா மாய்ந்தது
வருணச் சிரமமெனு மயக்கமுஞ் சாய்ந்தது"

—எனவும்,

"குலத்திலே சமயக் குழியிலே நரகக்
குழியிலே குமைந்து விண் பொழுது
நிலத்திலே போக்கி மயங்கியே மாந்து
நிற்கின்றார்......"

—எனவும்,

"சதுமறை ஆகம சாத்திர மெல்லாஞ்
சந்தைப் படிப்பு நஞ் சொந்தப் படிப்போ"

—எனவும்,

"தெய்வங்கள் பலபல சிந்தை செய் வாருஞ்
சேர்கதி பலபல செப்புகின் றாரும்
பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும்
பொய்ச் சம யாதியை மெச்சுகின்றாரும்"

—எனவும்,

வரும் இடங்களையும், மற்றும் பல பாக்களில் வரும் அத்தகு கருத்துக்களையும் காண்பவர்கள் அவரது ஆரியக் கண்டனத்தை உணர்வர். அதுவே-சமயச் சீர்திருத்தமாகச் சமரச சன்மார்க்கமாகப் பொதுநெறியாக உருக்கொள்ளலாயிற்று.

அடுத்து, இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் திகழ்ந்த அறிவுநூல் பேராசிரியர், சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றித் தந்த நாடக இலக்கியமாகிய "மனோன்மணீயத்தின்" தொடக்கத்தில் கடவுள் வாழ்த்தாகப் பாடப்பெற்ற தமிழ் வாழ்த்தே, வடமொழியினும் தமிழே எவ்விதத்தினும் உயர்ந்தது, என்ற கருத்தை முதன் முதல் மக்களிடம் பரப்பியதாகும்.

அப் பாடலே கீழ் வருவதாகும்:

"நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்

தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திரவிடநல் திருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழ்
அணங்கே!''

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத்
துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாள முந்துளுவும்
உன்னுதரத்(து) உதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலக வழக் கழிந்தொழிந்து
சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!''

ஆம், இப்பாடலே, தமிழின் பெருமையையும், வட மொழி பாடை ஏறினமையையும், எவரிடமும் மார்தட்டிக் கூறும் உறுதியைத் தமிழ்மக்களுக்கு அளித்தது எனலாம்.

மேலும், அதே காலத்தில் வெளிவந்த, யாழ்ப்பாணம் சபாபதி நாவலர் அவர்கள் இயற்றிய 'திராவிடப் பிரகாசிகை' என்ற இலக்கிய வரலாற்று நூலும் "Dravidic Studies" (திராவிட ஆராய்ச்சிகள்) என்ற வெளியீடும், Ancient Dravidians, (பண்டைத் திராவிடர்), Pre-Aryan Tamil Culture (ஆரியருக்கு முற்பட்ட தமிழர் நாகரிகம்) முதலான பல வரலாற்று ஏடுகளும், பரிதிமாற் கலைஞன் இயற்றிய 'தமிழ்மொழி வரலாறு' முதலிய மொழி ஆராய்ச்சி ஏடுகளும்—நாளடைவில், தமிழர் உணர்ச்சி யிலேயே - தாம் திராவிடர் என்ற எண்ணத்தை வளர்த்து வந்தன. ஆரிய மொழி, கலை, நாகரிகம் எதற்கும் இனியும் இங்கு இடந்தருதல் கூடாது என்ற எண்ணமும் அத் துடன் வலிவு பெற்று வரலாயிற்று.

*　　*　　*

இந்நிலையில் இந்தியத் துணைக்கண்டத்தின் விடுதலைக்கான போராட்டங்கள் நிகழ்ந்த போதே, அவற்றுடன் இணைந்தே வடநாட்டவரின் செல்வாக்கும், ஆதிக்கமும் தெற்கே விரிந்து பரவுகின்ற உண்மை தெளிவாயிற்று. விடுதலை இயக்கமான காங்கிரசின் முடிசூடா மன்னர்களாக விளங்கும் வாய்ப்பெல்லாம் வடவருக்கே சென்றதைக் கண்டனர்.

வரலாற்றில், வடக்கே தோன்றிய பலப்பல சாம்ராஜ்யங்கள், பேரரசுகள் தெற்கே விரிந்து பரவிய பல காலங்களில் தமிழ் நிலத்தைத் தவிர—திராவிடத்தைத் தவிர பிறபகுதிகளையே தமது ஆதிக்கத்தில் அகப்படுத்தியதை அறிந்திருந்த பெருமக்கள், இந்நாள் விடுதலை இயக்கத்தின் பேரால், வடக்கு தெற்கின்மீது தனது பிடியை வலுப்படுத்தி வருவதையும், தெற்கைத் தலை தூக்க விடாத போக்கையும் கண்டனர். உரிமை உணர்வு பொங்கலாயிற்று.

ஆதிக்கவாதி அங்கே! ஆளடிமை இங்கே! அடக்கிப் படைப்பவர் அங்கே! அடங்கிக்கிடப்பவர் இங்கே! தலைமைப் பீடம் அங்கே! எடுபிடி நிலை இங்கே! ஆட்சி அங்கே! வீழ்ச்சி இங்கே! என்ற இந்தப் போக்கு ஒவ்வொரு துறையிலும் இடம் பெற்று வருவதைக் கண்டனர்.

பல காலமாகவே மதத்துறையில், புண்ணிய தீர்த்தம் கங்கை, புண்ணிய தலம் காசி, துவாரகை என்று வழங்கியதுபோல், அரசியலுக்குத் தலைநகர் டில்லி, வாணிபத்துக்குப் பீடம் பம்பாய், நெசவாலைகளுக்கு உரிய இடம் ஆமதாபாத், இரும்புத் தொழிலுக்குச் சிறப்பிடம் ஜெம்ஷெட்பூர் என்று இப்படியே வடக்கின் பட்டியல் வளருவதைக் கண்டனர். இதற்குத் துணையாகவே காங்கிரஸ் அமைகிறது என்பதையும் கண்டறிந்தனர் புலவர். அவர்களுள் சர். பி. தியாகராயர் அவர்களும் டாக்டர் டி. எம். நாயர் அவர்களும், வடவர் ஆதிக்கப் போக்கை கண்டே வெவ்வேறு சமயங்களில் காங்கிரசினின்றும் விலகிக் கொண்டனர். தென்னாட்டின் நிலைமையை எண்ணி மனவேதனை கொண்ட நல்லறிஞர் பலருள் ஒருவ

ரான டாக்டர் சி. நடேச முதலியார் அவர்கள் தென்னாட்டு மக்களுக்குத் தொண்டாற்றும் நோக்கத்தோடு 1910-ஆம் ஆண்டிலேயே "திராவிடச் சங்கம்" என்ற பெயரால் ஒரு கழகத்தைத் தொடங்கி நடத்தி வரலானார். அதன் மூலம் திராவிடத்தின் மேன்மை, தொன்மை, நன்மைகள் பற்றிப் பல விரிவுரைகள் நிகழ்ந்து வந்தன.

அக்காலத்தில், தியாகராயரும், நாயரும், சென்னை நகர சபை உறுப்பினர்களாக அமர்ந்து, ஒருவரோடு ஒருவர் மாறுபடும் வகையில் ஆற்றல் மிக்க எதிர்க் கட்சியினராக அருந்தொண்டாற்றி வந்தனர். அவர்களது ஆற்றலையும், அவ்விரு அரும் பெரும் தலைவர்களும் ஒருவரோடு ஒருவர் எதிர்த்து நிற்பதால் திராவிடச் சமூகத்துக்கு ஏற்படும் பெரியதொரு இழப்பையும் கண்ட டாக்டர் நடேசனார் அவர்கள், அவ்விருவரையும் மாறுபாடு நீங்கி ஒன்றுபடச் செய்தார். அம்மூவருமே, தென்னிந்திய மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க ஓர் இயக்கம் தேவை என்பதை முதலில் உணர்ந்தனர்.

அதன் பயனாக, வெள்ளாடை வேந்தர், திராவிடத் தந்தை தியாகராயர், திராவிடத் தோன்றல் டாக்டர் டி. எம். நாயர், திராவிடச் செம்மல் டாக்டர் சி. நடேசனார் ஆகியோர் முன்னின்று, மற்றும் பலரது ஒத்துழைப்புடன் "தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்" (S. I. L. F.) என்ற அமைப்பை நிறுவினர். அவ்வியக்கம் பார்ப்பனரல்லாதார், பிற்படுத்தப்பட்டவர், தாழ்த்தப்பட்டோர், சிறுபான்மையினர் ஆகியோரின் நலன்களையும் உரிமைகளையும் பாதுகாக்க முனைந்தது.

ஆங்கில அரசாங்க அலுவல்களிலும், நீதிமன்றங்களிலும், கல்வி நிலையங்களிலும், மற்றும் பல துறைகளிலும் பார்ப்பன வகுப்பினர் மட்டுமே பெரும்பாலாராக இடம்பெற்று ஆதிக்கம் செலுத்தி வந்ததைக் கண்டே தெ. இ. ந. சங்கத்தார்—மற்ற வகுப்பினர்களுக்கும் அவற்றில் இடமளிக்க வேண்டும் என்று கேட்கத் தொடங்கினர். எனவே அவ்வியக்கமே வகுப்புவாத இயக்கம் என தூற்றப்படலாயிற்று. ஒரு வகுப்பார் ஆதிக்கம் செலுத்த, மற்ற

வகுப்பினரெல்லாம் உரிமையற்றுத் தாழ்ந்து கிடப்பதோ? என்று கேட்பதே, 'வகுப்பு வாதம்' என்று பார்ப்பனர்களா லும், அவர் தம் பாதந்தாங்கிகளாலும், அவர்களின் புகலிட மாக அமைந்த தேசீயக் கட்சியின் இதழ்களாலும், பறை சாற்றப்பட்டது. உண்மையை உணர்த்தக் கருதியே, தெ. இ. ந. சங்கத்தார், 'திராவிடன்' என்று தமிழிலும் 'ஜஸ்டிஸ்' என்று ஆங்கிலத்திலும் இருநாளிதழ்களை வெளி யிடலாயினர். பின்னரே, இதழின் பெயரான 'ஜஸ்டிஸ்' கட்சியின் பெயருமாயிற்று. 'ஜஸ்டிஸ் கட்சி'யே தமிழில் 'நீதிக்கட்சி' என வழங்கியது.

'ஜஸ்டிஸ்' கொள்கைக்கு வாதாடிற்று. 'திராவிடன்' இனவுணர்வை வளர்த்தான். திராவிடத்தின் வீரத் தொண்டர்களான திருவாளர்கள் ஜே. என். இராமநாதன் தி. வி. சுப்பிரமணியம், ஜே. எஸ். கண்ணப்பர் முதலா னோர், நாடுமுற்றும் உள்ள நகரங்களில் எல்லாம் 'திராவிட முழக்கம்' செய்து வரலானார்கள். 'அக்ரஹாரம்' அதன் மூலபலத்தோடு எதிர்க்க முனைந்தது. எனினும் அன்று தோன்றிய அக்கிளர்ச்சி இன்றளவும் வளர்ந்து கொண்டு தான் வருகிறது. நீதி பிறக்காமற் போகவில்லை.

அக்காலத்தில் பார்ப்பனரல்லாதாரிலும் பலர் படித் துப் பட்டமும் பெற்று அரசாங்கப் பதவிகள் பெற முயற் சிக்கத் தொடங்கினர். அரசாங்கத்தின் உயர்தர பதவி களில் பார்ப்பனர்களே அமர்ந்துகொண்டு, மற்றவர்கள் உள்ளே நுழையவே முடியாதபடிச் செய்து வந்ததால், பார்ப்பனரல்லாதாருக்கு மேலும் அநீதி இழைக்கப்படாமல் தடுத்து, அவர்களுக்கும் உத்தியோகங்கள் கொடுக்கும் படிச்செய்யவேண்டுமென நீதிக்கட்சித் தலைவர்கள் அரசாங் கத்தை வற்புறுத்திவந்தனர். அதன் விளைவாக "எல்லா வகுப்பாருக்கும் இடமிருக்கும் வகையிலேயே உத்தியோகங் கள் வழங்கப்படவேண்டும்" என ஓர் ஆணை (Order) அர சிறை (Revenue) இலாக்காவில் பிறப்பிக்கப்பட்டது. ஆனல் அதனல் எவ்வித பலனும் ஏற்படவில்லை.

*1920*-ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் நீதிக் கட்சி பெருவாரியாக வெற்றிபெற்றது. அரசியல் அறிஞர், பானகலின் மந்திரிசபை அமைந்தது. பானகலின் முயற்சி

யால், 1921-ல் சட்டசபையில் ஒரு தீர்மானம் நிறை வேற்றப்பட்டது. அதன்படி, அரசாங்கத் துறைகள் அனைத்திலும், எல்லாத்தரப் பதவிகட்கும், பல வகுப்பினரும் இடம் பெறும்படிக் கவனித்தே உத்தியோகங்கள் வழங்கப்பட வேண்டும் என்பது அரசாங்க ஆணையாகப் பிறந்தது. மேலும், இதன் நோக்கத்தையும் அரசாங்கம் தெளிவுப்படுத்தி யிருந்தது. எனினும், ஆதிக்கபுரியினரின் தந்திரங்களால், இதனாலும் நியாயம் பிறக்கவில்லை. பழைய நிலைமையில் மாற்றம் இல்லை.

பார்ப்பனர்களின் செல்வாக்கு மிகுந்த தேசீயக் காங்கிரஸ் வகுப்புரிமையை இயன்ற மட்டும் எதிர்க்கலாயிற்று. மேலும் நீதிக்கட்சியையே ஒழிப்பதற்காகப் பார்ப்பனரல்லாதார் பலரும் தேசீயக் காங்கிரசையே ஆதரிக்கின்றனர் என்று காட்டிக் கொள்வதற்காக "சென்னை மாகாணச் சங்கம்" என்னும் ஓரமைப்பும் ஏற்படுத்தப்பட்டது. அதில் பங்குகொண்டு உழைத்தவர்களில், திரு. வி. க., ஈ. வே. ரா., டாக்டர் வரதராசலு முதலியோர் குறிப்பிடத்தக்கவராவர். எனினும், 'வகுப்புரிமை' என்னும் நீதி தேசியக் காங்கிரசிலேயே வேர்விடத் தொடங்கிற்று.

மற்றும், காங்கிரஸ் நிர்மாணத்திட்டத்தை நிறைவேற்றும்படி பெருநிதி திரட்டிச் சேர்மாதேவியில் அமைக்கப்பட்ட குருகுலம், வ. வே. சு. ஐயரின் மேற்பார்வையில் நடந்தபோது, அங்கு ஒரு பெரும் அநீதி இழைக்கப்பட்டது. குருகுலத்தில் சாதி வேற்றுமை புகுத்தப்பட்டது. இலவசமாகப் பயிலும் மாணவர்களுள், பார்ப்பன மாணவர்களுக்குத் தனிப்பந்தி, நெய், நல்லமோர் இவைகளுடன் சிறப்புணவும், பார்ப்பனரல்லாதார் மாணவர்க்கு தனிப்பந்தியும் வெற்றுணவும் அளிக்கப்பட்டன. இதைக் கேள்விப்பட்ட போதே, பார்ப்பனரல்லாத காங்கிரஸ் தலைவர்களில் திரு. ஈ. வே. ரா. முதலானவர்கள் மனங்கொதித்து, இந்தச் சாதி வெறியை எதிர்த்துப் போரிடலாயினர். தேசியக் காங்கிரசில், சமபந்தி உணவுக்குக் கூடப் போராட்டம் தேவைப்பட்டது அக்காலத்தில். அதுவே சுயமரியாதை இயக்கத்தின் வித்தாயிற்று எனில் தவறாகாது.

இப்படிப்பட்ட பல காரணங்களாலும் தஞ்சையில், 1920-ல் நடைபெற்ற மாகாணக் காங்கிரஸ் மாநாட்டிலேயே வகுப்புரிமை தலையெடுக்கலாயிற்று. காங்கிரஸ் கட்சி நிருவாகத்திலேயே 50-விழுக்காடு இடங்கள் பார்ப்பன ரல்லாதாருக்கென ஒதுக்கப்பட வேண்டும் என்று ஈ. வே. ரா. கேட்கத் தொடங்கினர். அடுத்த ஆண்டுகளில் நடை பெற்ற மாகாண மாநாடுகளிலும், தமது தீர்மானத்தை வலியுறுத்தி வரலானர். அவ்வப்போதும், பார்ப்பனத் தலைவர்கள், திரு. ஈ. வே. ராவுடன் எப்படியோ சமா தானம் செய்துகொள்ளலானர்கள்.

1924-ஆம் ஆண்டில், திருவண்ணாமலையில் நடந்த காங்கிரசிற்குத் திரு. ஈ. வே. ரா. தலைமை வகித்தார். அவர் தமது தலைமையுரையிலேயே, "பார்ப்பனர், அல்லா தார் வேற்றுமை யுணர்வு தோன்றுவதற்கு அடிப்படை யான காரணங்கள் இருத்தல் வேண்டுமெனவும், காங்கிரஸ் வாதியாயிருந்த டாக்டர் டி. எம். நாயர் அவர்கள் திடீ ரென ஒரு கட்சியைத் தோற்றுவிக்கக் காரணங்களாய் நின்றவைகள், இன்னும் நிற்கின்றனவா இல்லையா என் பதை நேயர்கள் கவனிப்பார்களாக எனவும், அக்காரணங் கள் அழிந்துவிட்டதாக எனக்குத் தோன்றவில்லை எனவும்" கூறியுள்ளார். அதற்கு முன்னும் நிகழ்ந்தது போலவே, செயற்குழுவில் அத்தீர்மானம் வரும்போது, நடைமுறையில் அவ்வாறே கவனித்துக் கொள்ளலாம், வெளிப்படையாக எழுத்தில் வரவேண்டாம், அது நல்ல தல்ல என்று சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் முதலியவர்களால் கேட்டுக் கொள்ளப்பட்டே, அத்தீர் மானம் கைவிடப்பட்டுள்ளது. ஒப்புக்கேனும், தீர்மானத் தின் கருத்து (உயிர்) ஒப்புக்கொள்ளப்பட்டது, அதன் வடிவம் (உடல்) மறுக்கப்பட்டிருப்பினும் கூட.

இதற்கிடையில் 1922-ல் சுயராஜ்யக் கட்சி தோன்றி வளரலாயிற்று. அக்கட்சி தேர்தலில் ஈடுபடும் எனக் கண்டு பார்ப்பனர்கள் அதில் புகலாயினர். மேலும் தேசியக் காங்கிரசையே, தேர்தலில் ஈடுபடும் தனது திட் டத்திற்கு இசையச் செய்யும் என்பதும் புலனாயிற்று. எனவேதான் 1925-ஆம் ஆண்டில், காஞ்சியில், திரு.வி.க.

அவர்கள் தலைமையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் திரு. ஈ. வே. ரா. தமது வகுப்புரிமைத் தீர்மானத்தை வலியுறுத்தலாயினர். மாநாட்டின் தலைவரான திரு. திரு. வி. க. அவர்களோ, வகுப்புரிமை, வகுப்பு வாதத்தை வளர்க்கும் என்ற கருத்துடையவராக இருந்தாலும், சுயராஜ்யக் கட்சியின் அரசியல் திட்டத்தைக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டு தேர்தலில் ஈடுபட வேண்டும் என்ற கருத்துப்பட கொண்டுவரப்பட்ட தீர்மானம் விவாதத்திற்குப் பின் கைவிடப்பட்டு விட்டதாலும், பதவியைக் கைப்பற்றும் நிலை தோன்றுதபோது வகுப்புரிமைத் தீர்மானத்திற்கு ஏது அவசியம் என்ற எண்ணத்தாலும், தலைவர் திரு. வி. க., ஈ. வே. ரா. தீர்மானத்திற்கு அநுமதி மறுத்து விட்டார்.

தீர்மானத்தை, எக்காரணம் பற்றி மறுத்திருப்பினும் தடுக்கப்பட்டு, ஏமாற்றப்பட்டு, அழுத்தி வைக்கப்பட்டுள்ள உரிமை உணர்ச்சி எவ்வளவு காலந்தான் வெளிப்படாமல் இருக்க முடியும்? ஆகவேதான் அம்மாநாட்டிலேயே, 'வகுப்புரிமையை நிலைநாட்டுவேன், பார்ப்பன ஆதிக்கக் காங்கிரசை ஒழித்துக் கட்டுவேன்!' என்ற வீர முழக்கத்தோடு தலைவர் ஈ. வே. ரா., அறிஞர் எஸ். இராமநாதன் தோழர் எஸ். வி. லிங்கம் முதலிய பலருடன் காங்கிரசை விட்டு வெளியேறினர்.

காங்கிரசை விட்டு வெளியேறிய அக்குழுவினர், தமிழர்களின், அரசியல், சமூகவியல், மதவியல் முதலிய துறைகளில் பார்ப்பனர்களின் ஆதிக்கம் நிலைபெறக் காரணமாக உள்ளவைகளைக்கண்டு, அவற்றை மக்களுக்கு எடுத்துக் கூறுவதையே இலட்சியமாகக் கொண்டனர். 'சுயமரியாதை' இயக்கம் தோன்றிற்று. ஆராய்ச்சியால் பார்ப்பன ஆதிக்கத்திற்கான பல காரணங்களும் மேலும் மேலும் தெளிவாகப் புலப்படலாயின.

பிராமணர்—பூதேவர், பிரம்மாவின் முகத்தில் பிறந்தோர், தேவபரம்பரை, இருபிறப்பாளர், ஞானிகள் சாஸ்திரிகள், உயர்சாதியினர், வலது கையிலே அக்னி வைத்திருப்பவர் எனக் கருத்தில் நம்பிக் கொண்டு

தம்மைப் பிரம்மாவின் பாதத்தில் பிறந்தோர், இழிகுலத்தவர், சூத்திரர், பிராம்மணருக்குத் தொண்டு செய்வதே கடனாகக் கொண்டவர் என எண்ணி இருப்பதாலேயே பார்ப்பனரல்லாதார் இவ்விழி நிலைக்கு ஆளாயினர் எனக் கண்டனர். பார்ப்பனரைச் சாமி என்று தாம் அழைப்பதும், நமஸ்கரிப்பதும், அவர் தம்மை இழித்துரைப்பதைக் கேட்டும், உணர்வின்றி அவற்றை ஏற்றுக்கிடப்பதுமாகிய ஏமாளித்தனம், பா. அல்லாதாருக்குச் சுயமரியாதை உணர்வின்மையாலேயேயாம் எனவும் கருதினர். எனவேதான் "சூத்திரன் என்றால் ஆத்திரங் கொள்", "பார்ப்பானைச் சாமி என்று அழையாதே," "புரோகிதனைப் போற்றாதே" என்னும் தன்னுணர்வுத் தொடர்கள் தோன்றின.

மேலும் மூடநம்பிக்கைகள் ஒழிக்கப்பட்டால்தான் பார்ப்பனர்களின் கர்வ மனப்பான்மையும், மற்றவர்களின் தாழ்வு மனப்பான்மையும் நீங்கிச் சமத்துவம் அரும்ப முடியும் என்பதும் விளங்கிற்று. அதற்காகவே, மக்களிடை பழமை, வைதீகக் கொள்கைகளின் கேடுகளை விளக்கிப் பகுத்தறிவுக் கருத்துக்களைப் பரப்பலாயினர். சுயமரியாதை இயக்கம் விதைக்கப்பட்ட பின்பே, அதன் பயனாகக் 'குடியரசு'—முளைத்தது, 'ரிவோல்ட்' (revolt) 'புரட்சி' தழைத்தது. 'பகுத்தறிவு' அரும்பிற்று, "விடுதலை" பூத்தது.

அக்காலத்தில்தான், தமிழகத்தின் இருள் போக்கும் பணியில் ஈடுபட்ட அறிவுச் சுடர்களான, பகுத்தறிவாளர், எஸ். இராமநாதன், தன்மான வீரர். சௌந்தர பாண்டியன் சிந்தனையாளர். மா. சிங்காரவேலர், கருத்துரையாளர். கைவல்யனார், அஞ்சா நெஞ்சர் அழகிரியார், செயல்வீரர். எஸ். வி. லிங்கம், கொள்கை வீரர். (பூவாளூர்) பொன்னம்பலனார், பொதுவுடமையர், ஜீவானந்தம், கலப்பு மணத்தினர் குருசாமி குஞ்சிதம், வீரத்தொண்டர்கள், மாயவரம் நடராசன், நாகை-மணி, திருவாரூர் T. N. இராமன், சேலம் சித்தையன், காரைக்குடி இராமசுப்பையா, புரட்சிக் கவிஞர். பாரதிதாசன், வீரத் தாய்மார்கள் நாகம்மையார், மூவலூர் இராமாமிர்தம் அம்மையார் முதலிய பலப்பலர், சுயமரியாதை இயக்கத்தின் உடலாயினர். தலைவர் ஈ. வே. ரா. உயிரானார். அவர்களது ஓயாத உழைப்ப

சுயமரியாதை இயக்கம் சூருவளியாயிற்று, புயலாயிற்று, இடியாயிற்று, பெருமழையாகக் கொட்டிற்று. அதனை எதிர்த்துப் புரோகிதம் அதற்குப் பழக்கமான அவ்வளவு தந்திர மந்திரங்களையும் நயவஞ்சக நரிச் செயல்களையும், யாண்டுதான் பார்த்தது. நரியின் ஊளை ஒலி கேட்டா இடி முழக்கம் ஒய்ந்து விடும்? பகுத்தறிவுப் பெருமழையினில் வைதிகப் புழுதிமேடு கரையாமல் எப்படித் தப்பும்?

பின்னர் 1926-ஆம் ஆண்டில், காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியின் திட்டத்தை ஏற்றுத் தேர்தலில் ஈடுபட்டது. பெருவாரியாக வெற்றியும் பெற்றது. மந்திரி சபை அமைக்க இசைவது மில்லை, அமைப்பவர்களுடன் ஒத்துழைப்பதுமில்லை என்று—முதலில் பொதுமக்களிடம் கூறிய கொள்கைக்கு மாருக நடக்கலாயினர். தம்மில் இருவருக்கு அமைச்சு அளித்த சுயேச்சை மந்திரிசபையுடன் ஒத்துழைக்கலாயினர் காங்கிரஸ் கட்சியார். அக் கட்சியில் உறுப்பினராக இருந்த திரு. எஸ். முத்தையா முதலியார் அவர்கள், அதுகண்டு, சென்னை மாகாணச் செயற் குழுவில் அந்தக் குற்றத்தை எடுத்துக் கூறியும் பயனின்மையால், 1927-ல் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தின் போது, சென்னை காங்கிரசின் நாணய மற்ற போக்கைக் கண்டிக்கும் தீர்மானம் ஒன்றைக் கொண்டு சென்றனர். அக்காலக் காங்கிரஸ் தலைவர் எஸ். சீனிவாசய்யங்காரின் தந்திரத் திட்டத்தின்படி, அத்தீர்மானம் மறைக்கப்பட்டு விட்டது. அச்செயல் கண்டே, திரு. எஸ். முத்தையா அவர்கள் 1927-ஆகஸ்டில், காங்கிரஸை விட்டு வெளியேறினர். பின்னர் சட்டசபையிலேயே ஒரு தனிக் கட்சியும் அமைத்தார்.

அவர் விலகிய தன் நியாயத்தை, திரு. வி. க. அவர்களின் வாழ்க்கைக் குறிப்பும் உணர்த்துகின்றது. காங்கிரஸ் தனது முன்னாள் வாக்கினின்றும், கொள்கை மாறிச் செல்லும் போக்கைக் கண்டே, திரு. வி. க. அவர்களும் 9—7—1926-ல் காங்கிரஸ் மாகாணச் செயற்குழுவினின்றும் விலகிக் கொண்டதாகக் கூறியுள்ளார். அவ்வாறு தனிக்கட்சித் தலைவராக இருந்த வழக்கறிஞர் முத்தையா அவர்கள், டாக்டர். சுப்பராயன் அவர்கள் தனது முதல்

அமைச்சர் குழுவைக் கலைத்து, நீதிக் கட்சித் தலைவர் பானகலின் ஆதரவில், புதிய குழுவை அமைத்த போது அதன் இரண்டாவது அமைச்சராக இடம்பெற்றார். காங்கிரஸ் சூழ்ச்சியில் விளைந்த செல்வாக்கு கவிழ்ந்தது, நீதிக்கு வலிவு ஏற்பட்டது.

அப்பொழுதுதான், பானகல் அவர்கள் பலவாண்டு களாகச் செய்து வந்த முயற்சி, திரு. முத்தையா அவர் களின் உறுதியால் நிறைவேறிற்று. கவர்னரின் ஆட்சிக் குழு உறுப்பினர்களில் (Executive Council members) சிலரே எதிர்த்த போதிலும், தமது கூர்த்த அறிவாலும், ஊக்கத்தாலும், உயர் நோக்கத்தாலும் உழைப்பாலும், கிடைத்த வாய்ப்பை நழுவ விடாது, 'கம்யூனல் ஜி. ஓ.' என்ற வகுப்புரிமை நீதியை, 1928-ஆம் ஆண்டில் அர சாங்கத்தின் ஆணையாகப் பிறப்பித்தார் திரு. முத்தையா. முதலில் தமது நிர்வாகத்தில் இருந்த துறைகளில் அதைச் சரிவர நடத்திக் காட்டியே பின்னர், சட்டமாக நிறை வேற்ற நேரிட்டது. இடையில் பலவித எதிர்ப்புக்கள். என்றாலும் வெற்றி பெற்றார். அது காரணமாகவே சட்ட சபையில் ஓர் ஒத்திவைப்புத் தீர்மானமும் கொண்டுவரப் பட்டது. விவாதிக்கப்பட்ட பின்னர், முடிவில் அதுவும் ஆதரவாகவே அமைந்தது.

பார்ப்பனரல்லாதாரும், மற்றத் தாழ்நிலையினரும் வாழ்வு பெறும்படியான அச்சட்டம் பிறந்த உடனேயே, அச்சமூக நீதியைச் சாய்த்திட, மடிசஞ்சி மரபினர் வரிந்து கட்டி வசை தொடுக்கத் தவறவில்லை. பிறர் வாழப் பொறுக்கவில்லை பிரமன் முகத்துதித்தோரது உள்ளம். அவர்தம் உளுத்த உள்ளம் கக்கியது கடுவிஷம்! அதைத் தாங்கி நின்று, நீதியைக் காக்கும் பணி புரிந்தனர் வீர மரபினர்.

அரசியல் அரங்கில், நீதிக்கட்சியின் மாபெருந்தலைவர் களின் மறைவாலும், பின்னர் வந்த தலைவர்களின் ஆற் றல் குறைவாலும், சில தலைவர்களின் தன்னலத்தாலும், துரோகத்தாலும், கட்சி தினசரிகள் நின்றதாலும், பிரச் சாரமின்மையாலும், மாற்றுக் கட்சியினரான காங்கிரசார்

புகழ்மிக்க காந்தி அடிகளைத் தலைவரர்கப் பெற்றதாலும், பத்திரிக்கை எதிர்ப்பாலும், பார்ப்பனர்களின் கட்டுப் பாட்டாலும், நீதிக்கட்சி செல்வாக்கை இழந்துவரத் தலைப் பட்டது.

கம்யூனல் ஜி. ஓ.வுக்குக் காரணமாக இருந்த நீதிக் கட்சியை வீழ்த்துவதே இலட்சியமாகக் கொண்ட பார்ப் பனர், தேசியப் போர்வை போர்த்து, விடுதலை இயக்கத் தின் பேரால் பதவி வேட்டையாடத் தொடங்கினர். சமூக நீதிக்காகவே உள்ள கட்சி, அத்தாக்குதலை எவ்வ ளவு காலத்திற்குத்தான் தாங்க முடியும்? ஆனல் சுயமரி யாதை இயக்கமோ, மக்களின் உள்ளத்தைக் கிளறும் உணர்ச்சியோடு, பலவித தொல்லைகட்கும் எதிர்ப்புகட்கும் இடையில் வளர்ந்து வரலாயிற்று.

இங்கிலையில் 1937-ல் நடைபெற்ற தேர்தலில் - காங் கிரஸ் பெரும் வெற்றி பெற்றது. சக்கரவர்த்தி இராச கோபாலாச்சாரியின் மந்திரி சபையும் ஏற்பட்டது. முன் னர் 1921-முதல் 26-வரை நீதிக்கட்சி ஆட்சிசெய்த காலத் தில், கல்லூரிகளில் எல்லா வகுப்பு மாணவர்களும் இடம் பெறும் பொருட்டுக் கல்லூரிக் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டு, அவை செயலாற்றி வந்தன. அதனுல்தான், ஓரளவேனும் பிற்பட்ட மக்கள் கல்லூரிகளில் இடம் பெற இயன்று வந்தது. கம்யூனல் ஜி. ஓ.வின் விகிதாச்சாரம் வெளிவந்த பின்னர், கல்லூரிக் குழுவினரும் இயன்ற அளவில் அந்த முறையையே பின்பற்றி வந்தனர். ஆச்சாரியார் ஆட்சி ஏற்பட்ட உடனேயே தமது இனத்துக்கு உயர்வு தேடத் திட்டமிடலானுர். கம்யூனல் ஜி. ஓ.வில் கை வைப்பது ஆபத்தாகும் என்று கண்டு கொண்டதால், அதற்கொரு துணையாக, பாய்காலாக உள்ள கல்லூரிகளில்; மாணவர் நுழைவைப் பங்கிடுகின்ற கல்லூரிக் குழுக்களை ஒழித்துக் கட்டினுர். அவரது வகுப்பார் கல்லூரிகளில் விருப்பம் போல் இடம்பெற வழிகண்டார் முதலில். அடுத்து உயர் பதவிகளில் தமது இனத்தவராகத் தேடி அமர்த்தும் தொண்டையும் செய்யத் தவறவில்லை.

மேலும், தமது இன ஆட்சி என்றும் நிலைக்க அவசிய மான தேசிய வெறியை வளர்த்து, மக்களை அடிமைப்

படுத்தத்தக்க வழி எதுவெனக் கருதி, வடவர் மொழியான இந்திக்கு ஆதிக்கம் தேட முனைந்தார். பள்ளிகளிலெல்லாம் இந்தி நுழைந்தது. பிள்ளைகளுக்குக் கட்டாய பாடமாக்கப்பட்டது. பள்ளிகளில் பயின்ற தமிழ்ச் சேய்கள் பருகிய அறிவமுதில், ஆதிக்க மொழி என்னும் நஞ்சு கட்டாயமாகக் கலக்கப்பட்டது. உண்மை உணர்ந்தவர் நெஞ்சு பதறினர். இந்திக் கட்டாயம், கூடாது என ஆர்த்து எழுந்தனர்.

தனித் தமிழ்த் தந்தை மறைமலையடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார், ஈழத்துச் சிவாநந்த அடிகள் ஆகியோர் இந்தியைக் கட்டாயப்படுத்துவதை மிக வன்மையாகக் கண்டித்தனர். அறப்போர் தொடுத்தேனும் இந்தி ஆதிக்கத்தை ஒழிக்கவேண்டும் என்ற முழக்கமும் எழுந்தது. அதை ஆதரித்து, பல்கலைப் புலவர். கா. சுப்பிரமணிய பிள்ளை, கரந்தை, தமிழவேள், உமாமகேசுவரனார், சர். கூர்மா வேங்கடரெட்டி நாயுடு முதலியவர்களும், திருமதி. நீலாம்பிகையார் முதலிய தாய்மார்களும் முழங்கலானார்கள். மக்கள் ஆர்வத்தையும், அறப்போரின் அவசியத்தையும் உய்த்துணர்ந்த தலைவர். ஈ. வே. ரா, தளபதி சர். ஏ. டி. பன்னீர்ச் செல்வம், அறிஞர் அண்ணாதுரை, தமிழ் வீரர் கி. ஆ. பெ. விசுவநாதம், அஞ்சா நெஞ்சர் அழகிரிசாமி, தமிழ்க் காவலர் செ. தெ. நாயகம் முதலிய பலரும் கட்டாய இந்தியை எதிர்த்து எச்சரிக்கலானார்கள். தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களும் "இந்திக் கட்டாயம் வேண்டாம்! இதில் பிடிவாதம் கூடாது" என ஆச்சாரியாருக்கு நல்லுரை நவின்றார். எச்சரிக்கையோ, நல்லுரையோ பலனளிக்கவில்லை. அறப்போரைத் தவிர வேறு வழியே இல்லை. போர் முரசும் முழங்கப்பட்டது.

தாய்மார்களும் தளபதிகளும் முன்னின்று, ஆயிரமாயிரம் வீர இளஞ்சிங்கங்களைப் படை திரட்டிப் போர் தொடுத்தனர். திருச்சியினின்றும், வீரர் அழகிரிசாமி தலைமையில் மொழிப் பாதுகாப்புப் படை ஒன்று புறப்பட்டு ஊரெங்கும், வழி நெடுக உணர்ச்சியூட்டிக் கால் நடையாகவே சென்னை வந்தடைந்தது. கிழவரும் பெண்களும் கூட அணி அணியாகக் கலந்து கொண்டனர். அரசாங்

கத்தின் அடக்குமுறைகள் தாண்டவமாடின. போலீசு, தனது முழுபலத்தையும் செலவழித்தது. எனினும் அறப்போர் மங்கவில்லை, மறையவில்லை.

ஆயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் அப்போரில் சிறை புகுந்தனர். தியாகச் செம்மல்களுக்கு, "மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை, எம்மை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை" என்ற புரட்சிக் கவிஞரின் புத்துணர்ச்சி நல்கும் அடிகளே, சிறைக்குள்ளேயும் கொடுமை மறக்கச் செய்யும் குளிகையாயிற்று. தலைவர் ஈ. வே. ரா. வெப்பம் மிகுந்த பெல்லாரி சிறையில் அடைக்கப்பட்டார். அண்ணாவும், அடிகளும் மற்றும் பல தமிழறிஞர்களும் சிறைப்பட்டனர். வீரத் தாயும் சேயுங்கூடச் சிறைப்பட்டனர் எனில், அந்த உணர்ச்சிக்கு வேறென்ன சான்று வேண்டும்! வீரம், தியாகம், மொழிப்பற்று, நாட்டுப்பற்று அனைத்தும் நாளும் வீறிட்டெழலாயின.

அத்தகைய அறப்போர் வெற்றி பெறுமுன் வீர இளைஞர் இருவரை இழக்கும் தாங்கொணாத் துயரம் விளைந்தது தமிழ் அன்னைக்கு. தமிழ் அன்னையின் கைகளுக்கு விலங்குகளோ, வாழ்வுக்குப் பகையோ, உயிருக்கும் வாதையோ, என்று அலறிக் குமிறிக் கொதித்து, தமது கைகளில் விலங்கேற்று வாழ்வுக்குப் பகையான சிறைக் கோட்டம் புகுந்து, தமது உயிரையும் வழங்கினர், அன்னையின் உயிர்வாதையைக் காணப்பொறாத இரு கண்மணிகளான தாளமுத்து-நடராஜன் என்னும் வீரத் தியாகிகள். தாயின் உயிர்காக்கத் தம்முயிர் தந்தனர் அந்த உத்தமர்கள். உயிருடன் உலவி, உணர்ச்சியுடன் உரையாடி, உரிமை காக்க முன்னின்ற வீரர்கள், உயிரினைத் தமிழுக்களித்து, உணர்ச்சியினைத் தமிழருக்கு ஊட்டி, உயிர் நீத்த உடலினை ஆச்சாரியாரின் வெட்டி ஆட்சிக்குப் பரிசாக்கிப் பிரிந்தனர். தமிழகம் இரத்தக் கண்ணீர் வடித்தது. அக்கண்ணீரில் ஆட்சிப்பீடத்தின் செல்வாக்கு கரையலாயிற்று.

"ஆண்டால் நாங்கள் ஆளுவோம், இல்லையேல் வெள்ளையன் தான் ஆளுவான்" என்பது போன்ற மமதை கொண்ட பேச்சில் ஈடுபட்டிருந்த ஆச்சாரியார், தமது

திமிர் வாதங்களைக் குறைத்துக் கொள்ளலானார். மண்டை கர்வம் மிகுந்த, அகம்பாவங்கொண்ட காங்கிரஸ் எதேச்சாதிகாரம் அதனின்றும் சாய்ந்து, சரிந்து சமத்துவ மண்ணிலே வீழ்ந்தது; அம்மொழிப் போரின் விளைவாக. ஆச்சாரியாரின் அமைச்சர் குழுவும் ஆட்சியைக் கைவிட்டு விலக நேரிட்டது.

அந்த அறப்போரில் ஈடுபட்டுச் சிறைப்பட்டிருந்த போதுதான் தலைவர் ஈ. வே. ரா அவர்களின் செல்வாக்கு மிகவும் வளர்ந்தது. அதை உணர்ந்த நீதிக்கட்சியார், அவரையே தமது கட்சியின் தலைவராகவும் தேர்ந்தெடுத்தனர். இடைக்காலத்தில் சுயமரியாதை இழந்திருந்த நீதிக்கட்சி, சுயமரியாதை பெற்றது. அதுகாலைச் செல்வர் சிலருக்கு ஓய்வு நேரப் பணி புரியும் உப்பரிகை ஆகிவிட்டிருந்த நீதிக்கட்சி, பொதுமக்களின் உழைப்பினால் உருவாகி வளரும் பொதுமன்றமாக விளங்கலாயிற்று.

அப்பொழுது நிகழ்ந்த பெண்கள் மாநாட்டில்தான், தமிழர் தலைவர் அவர்கள், ஈ. வே. ரா பெரியார், எனப் போற்றப்படலானார். செயற்கரிய செய்தவரைப் பெரியார் எனப் போற்றியது தமிழ் நெஞ்சம்.

இந்தி எதிர்ப்புப் போர்க் காலத்தில், இயக்கத் தொண்டில் ஈடுபட்டவர்களில் முக்கியமானவர்கள்தான் தோழர்கள் சிந்தனைச் செல்வர் சி. பி. சிற்றரசு அவர்களும், செயல் வீரர் என். வி. நடராசன் அவர்களுமாவர்.

அறப்போர் நடைபெற்றபோது, 1938 — ஆம் ஆண்டில், வேலூரில் நடைபெற்ற ஒரு தமிழர் மாநாட்டில் தலைமை வகித்த, சர். ஏ. டி. பன்னீர்ச்செல்வம் அவர்களே முதன் முதல் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்று முழக்கியவராவர். அடுத்த நாள் சென்னையில் நடந்த, தெ. இ. ந. சங்க மாநாட்டிற்கென எழுதப்பட்டிருந்த பெரியாரின் தலைமையுரையிலும் அம்முழக்கம் காரணங்கள் காட்டி வலியுறுத்தப்பட்டிருந்தது. அதன் பின்பே, அம்முழக்கம் தமிழ்நாடெங்கும் பரவி, மக்கள் உள்ளத்தில் இடம்பெறலாயிற்று.

"தமிழ்நாடு தமிழருக்கே" என்ற முழக்கம் முதன் முதல் பரவத்தொடங்கியபோதுதான் "எலிவளை எலிகளுக்கே" என்னும் கேலி மொழி பேசப்பட்டது. குறுகல் நோக்கம், சிறுமதி என்று வசை கூறப்பட்டது; பலவகையான கண்டனங்களும் கிளம்பின. அவற்றுள், பெரும்பாலன பார்ப்பன வட்டாரங்களிலிருந்தே கிளம்பின என்பது குறிப்பிட வேண்டுவதாகும்.

"தமிழ் மொழி, உயர் தனிச்செம்மொழி. வடமொழிக் கலப்பு தமிழுக்கு ஆக்கமளிக்காது. தமிழர் ஒரு தனி இனத்தவர், பண்டைப் பெருமையுடையவர். தமிழர் கலை நாகரிகத்தைப் பாதுகாப்பது இன்றியமையாததாகும். அதற்குத் தமிழ் நாடு தனி ஆட்சி எய்தவேண்டும்" என்பன முதலான கருத்துக்களை எடுத்துக் கூறுவதே, பார்ப்பனர்களுக்கு வேம்பாயிற்று, வெறுப்புரைகள் கக்கினர்.

தமிழ், தமிழ்நாடு, தன்னாட்சி என்றாலே, பார்ப்பனர்களுக்கு மட்டும் ஏன் கசப்பாதல் வேண்டும்? "செந்தமிழ் நாடெனும் போதினிலே, இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே" என்று விடுதலைக் கவி பாடினாரே, அந்தச் செந்தமிழ் நாட்டிற்குச் சுதந்திரம் என்றவுடன் இந்த வீணருக்கு, வேறு எதுவோ தம் காதில் பாய்வதுபோல் தோன்றுவானேன்?

தமிழர் யார்? என்ற கேள்வியும் அதற்கு விளக்கமும் உரைக்கப்பட்டதாலேயே 'அவர்கள்' உண்மையைக் கண்டு ஓலமிடலாயினர். தமிழர் ஆவார், தமிழ் மொழியையே தாய்மொழியாக உடையவர். தமிழர் பண்பாட்டை இயல்பாகப் பெற்றவர், பிறமொழியைப் பெரிதெனப் போற்றாதவர், தமிழ்மொழிக்குக் கேடு தருவனவும, தமிழர் நெறிக்கு மாறானவுமான கொள்கையை மேற்கொள்ளாதவர். சுருக்கமாகக் கூறுவதாயின், ஆரியக் கொள்கைகளை ஏற்காதவரும், புகுத்தாதவரும், பரப்பாதவருமே தமிழர்-என்பது விளக்கி உரைக்கப்பட்டது.

மேலும், தமிழராவார் திராவிடர், திராவிடர் சாதி பேதம் அற்றவர், சாதி ஆரியத்தின் சதி, சாதிக்கொரு

நீதி என்பது தமிழரைத் தாழ்த்தும் வழி என்பவை விளக்கப்பட்டன. தமிழ் மொழியினின்றும் கிளைத்த மொழிகளான, கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகியவற்றைத் தாய்மொழியாக உடையவரும் திராவிடரே. அவர்களது நாகரிகப் பண்பாடும், திராவிடமே. திராவிடர் இந்துக்களல்ல. இந்து ஒரு மதமுமல்ல, தென்னாட்டவருக்கு உரிய பெயரும் அல்ல என்னும் கருத்துக்களும் வலியுறலாயின.

*1940*-ஆம் ஆண்டில், திருவாரூரில் நடைபெற்ற மாநில மாநாட்டில், 'நாம் இந்துக்களல்ல வாகலின், இனித் திராவிடர் (தமிழர்) என்றே குறிப்பிடவேண்டும்' என்னும் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

மேலும், "திராவிட மக்களின் உரிமையைப் பாதுகாக்க, டில்லி ஆதிக்கத்தினின்றும் (தொடர்பினின்றும்) விடுதலைபெற்று, திராவிடத் தனிநாடு காணவேண்டும்" என்பதும் உறுதிபெற்றது. திராவிடமக்கள், தமக்கிடையே மொழிவழியில் தனித்தனி நின்று, தனித்தனி மாநில ஆட்சிகொண்டு, இனமுறையால் ஒன்றுபட்டு, ஒரு நாட்டு மக்களாகக் கூட்டாட்சி காணவேண்டும். அவ்வாட்சி, திராவிடத்தின் இயல்பிற்கேற்ப, சுதந்திர, சமதர்ம, சமத்துவக் கூட்டாட்சியாக அமையவேண்டும். மொழிவழியால் தமிழர்களாகவும், இனமுறையால் திராவிடர்களாகவும் உள்ள நாம், ஐக்கிய திராவிடத்தின் விடுதலைக்குப் பாடுபடுவதே பயனுள்ளதாகும்—" என்பன, அம்மாநாட்டின், தலைவர் பெரியார், வெளியிட்ட கருத்துக்களாகும்.

இயற்கை அமைப்பையும், வரலாற்றுச் சான்றுகளையும், அரசியல் ஆதிக்கத்தையும், நாட்டு மக்களின் துன்ப வாழ்வையும், ஆரியர் பெறும் செல்வாக்கையும், வடநாடு தென்னாட்டைச் சுரண்டிக் கொழுப்பதையும், பிழைப்புத்தேடி வெளியேறும் திராவிடர்கள் வேற்று நாடுகளில் வதைபடுவதையும், பிழைப்புக்காக இங்கு புகும் வேற்றூர் பெருஞ்செல்வராகத் தழைப்பதையும், எண்ணிப் பார்த்து, ஒப்புநோக்கிச் சிந்தித்தே 'திராவிட நாடு திராவிடருக்கே' என்ற உரிமைக்குரல் எழுப்பப்பட்டது.

'திராவிட நாடு' ஒரு தனியாட்சி நாடாவதே, இயல்பாகவும் எளிதாகவும் நிகழும் என்பதோடு, அதுவே தமிழுக்கும், தமிழருக்கும், திராவிட இனத்திற்கும், ஒப்பற்ற அரணுமாம் என்பதும் தெளிவாயிற்று. "தமிழ் நாடு தமிழருக்கே" என்ற வைரக்கல் வைத்து இழைத்த தங்கப்பதக்கம் ஆயிற்று, "திராவிடநாடு திராவிடருக்கே" என்னும் முழக்கம்.

தமிழ் மக்கள் அரசியலில் தனி நாடு உணர்ச்சி கொள்ளத் தொடங்கிய அதே காலத்தில், மொழி, கலைத் துறைகளிலும் 'மறுமலர்ச்சி' விளையலாயிற்று.

தமிழ் நாட்டில் நடைபெறும் இசை நிகழ்ச்சிகளில் தெலுங்குக் கீர்த்தனங்களே பெரும்பான்மையாகப் பாடப் பட்டுத் தமிழ்ப் பாட்டுக்கள் சிறுபான்மையாக அதுவும் துக்கடாக்களாகவே பாடப்பட்டு வந்தன. தமிழர்கள் இசையினைக் கேட்டு இன்புற வகையின்றியே இசை விருந்துகள் நடைபெற்றுவந்தன. இசை அரங்கெல்லாம், தமிழ் மொழியையும், தமிழ் மக்களையும் இழிவு செய்வதாகவே அமைந்தன. அந்நிலையை மாற்றி, இசை அரங்குகளில் பெரும் பகுதியும் தமிழ்ப் பாடல்களே பாடப்பட வேண்டும் என்ற கருத்தைச் சுயமரியாதை இயக்கம் பல ஆண்டுகளாகவே கூறி வந்திருக்கிறது. எனினும் 1940-ஆம், ஆண்டில், வள்ளல். அண்ணாமலையார், தமிழிசை இயக்கத்தைத் தோற்றுவித்தபோதுதான், இசை அரங்குகளில் அக்கொள்கை இடம் பெறத் தொடங்கியது.

தமிழர்கள், தமிழிசை வேண்டும் என்று விரும்பினால் அதை நிறைவேற்றுவதற்குக்கூட ஓர் இயக்கம் தேவைப் பட்டது, மான உணர்ச்சி மங்கியுள்ள இந்நாட்டில். அவ்வியக்கத்திற்கும் எதிர்ப்பும், பகையும் தோன்றாமலில்லை. தேசிகர், பாகவதர் முதலியோர் இயக்கத்தின் குரலாயினர். அரியக்குடி, செம்மங்குடி போன்றோர் எதிர்ப்பு உணர்ச்சியோடு, தெலுங்கு ஓசையே எழுப்பி வரலாயினர். இசையிலும், கட்சி கட்டினர். தமிழிசையைக் கேலி, கிண்டல் செய்தனர். என்றாலும் அவ்வியக்கம், தமிழ் நாட்டில் உள்ள அனைத்துக் கட்சியினரின் ஆதரவையும் பெற்ற

தனுலும், தமிழர்கள் ஒன்றுபட்டு நிற்கும் நிலை எய்தியதாலும், அதை எதிர்ப்பவர்கள் பார்ப்பனர்களே என்ற உண்மை தெளிவாகத் தொடங்கியதாலும், தமது இன நலத்தைக்கருதி,'அவர்களிலே' சிலரும் ஆதரிப்பவர்களாக காட்டிக் கொண்டனர். மேலும், அவ்வியக்கம் 'பொருள்' வளத்தோடு திகழ்ந்ததால், முதலில் எதிர்த்தவர்களுங் கூட, ஆதரிப்பவர்களாக உள்ளே புகுந்து கொள்வதே 'இலாபம்' என்று கண்டுகொண்டனர். வெளிப்படையான எதிர்ப்பு மறைந்தது. 'தமிழ் இசை' இயக்கத்துள் யார் யாரோ, இடம் பெற்றுக்கொண்டனர். என்ருலும், மக்கள் உள்ளத்தில் தமிழிசை உணர்ச்சி நிலைத்து விட்டது.

அவ்வியக்கம், பழந்தமிழ்ப் பாடல்களை இசைத்துறையின் கண்கொண்டு ஆராயவும் தூண்டியது. மற்ருெரு பக்கத்தில், இசை அரங்கில் பாடப்படுவன எல்லாம் வெறும் பக்திப் பாடல்களாக் இருப்பது பயனளிக்காது; புதுமைக் கருத்துக்களைக் கொண்டனவாக, நாடு, மொழி, கலை, உழைப்பு, பெண்கள் முதலிய பல பொருள் குறித்தும் இசைப்பனவாதல் வேண்டும் என்ற கொள்கையும் சுயமரியாதை இயக்கத்தால் வலியுறுத்தப்பட்டது. அதன் பயனுகப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் முதலாகப் பலரின், புதுமைப் பாடல்கள் இசை அரங்கில் இடம் பெற்றன. இன்றே அவையே, பொதுமக்களின் உள்ளத்திற்கு விருந்தாகும் பாடல்களாக உள்ளன.

அதுபோன்றே, தமிழ் மொழியின் உரிமைகள் பலவற்றிற்கும், கிளர்ச்சிகள் நடைபெற வேண்டியிருந்தன, இருக்கின்றன இன்று வரையில்.

சென்னை அரசாங்கம், தமிழர்களின் பெயருக்கு முன்பாக, மரியாதை குறிப்பாக வழங்கும் 'ஸ்ரீ' என்பதற்குப் பதிலாக, 'திரு' என்ற தமிழ்ச் சொல்லையே வழங்க வேண்டும் என்று தமிழ்ப் பெருமக்கள் விரும்பினர்; வேண்டிக் கொண்டனர். தீர்மானங்கள் மூலம் வலியுறுத்தினர், பயனில்லை. இன்றும், தமிழில் எழுதினல் சிரிப்புக்கு இடமாகும், ஆரிய ஸ்ரீ தான் ஆட்சி புரிகிறது.

மேலும் ஸ்ரீமதியுடன், குமரியும் இடம் பெற்றுள்ளன. அவைகட்குப் பதில் திருமதி, செல்வி என்ற நற்றமிழ்ச் சொற்சள் வழங்கப்படின், எந்த 'ஆட்சி' அழிந்து விடுமோ தெரியவில்லை !

'நமஸ்காரம்' என்ற தொல்லைக்குப் பதில் 'வணக்கம்' வழக்குப்பெற எவ்வளவு முயற்சி! அக்ராசனர்—அவைத் தலைவராக, பிரசங்கம்—சொற்பொழிவாக, சபையோர்—அவையோர்களாக, சீமான்கள் — பெரியோர்களாக, சீமாட்டிகள் — தாய்மார்களாக, வந்தனோபசாரம்—நன்றியறிவிப்பாக எவ்வளவு காலமாயிற்று என்றெண்ணிப் பாருங்கள்.

கோவில் வழிபாட்டில்—இன்றும் வடமொழிதானே ஆதிக்கம் செலுத்துகிறது. வேதமந்திர மகிமை கூறி ஏமாற்ற இன்றும் சமஸ்கிருதம்தானே ஒப்புவிக்கப்பட்டு வருகிறது. தமிழ் மொழியே இடம் பெற வேண்டும், வேற்று மொழிக்கு இடமளிப்பது கொடுமை, அறியாமை, என்று எவ்வளவோ ஆண்டுக்ளாகக் கூறப்பட்டு வந்தும், இன்றும் தமிழ் இடம்பெற்ற பாடில்லையே! ஏதேனும் ஓரிரு இடங்களில்—தமிழ் இடம் பெற்று விட்டால் மட்டும் போதுமா ? அதனல் தமிழ் வாழ்ந்து விடுமா ?

வரலாற்றிலே இடம் பெறும், தமிழ் நாட்டின் ஊர்களின் பெயர்களெல்லாம், முன்னர் தமிழாக வழங்கியவை பின்னர் வடமொழியாகத் திரிக்கப்பட்டுள்ளன. அந்த அநீதி துடைக்கப்பட்டு, மறுபடியும் தமிழ்ப்பெயர்களையே அரசாங்கம் வழ்ங்க வேண்டும் என்று பல ஆண்டுகளாகக் கூறப்பட்டு வருகிறது. எனினும், இன்றுவரை, விருத்தாசலம், பழமலை ஆகவில்லை, வேதாரண்யம் — திருமறைக்காடு ஆகவில்லை. ஆகவிடவில்லை அரசாங்கம் !

தமிழ்மக்கள் தங்கள் குடும்பச் சடங்குகளைக்கூட, திருமணம் முதல் இறுதிச்சடங்கு வரை உள்ள அனைத்தையும் வைதீக முறையில் வடமொழி கொண்டுதான் நடத்தி வருகின்றனர். தமிழர் அவற்றைத் தமிழிலேதான் நடத்த வேண்டும் என்பதற்குங்கூட எதிர்ப்புக் கிளம்பியது இந்நாட்டில். உண்மையில் உள்ளத்தில் நஞ்சும் உதட்

டில் ஏதேனுமாக உள்ளவர்களின் உறவினலேயே, தமிழர்கள் தாங்கள் இழந்து விட்ட ஒவ்வொரு சிறு உரிமைக்குங் கூடக் கிளர்ச்சி செய்தாக வேண்டிய கெடுநிலைக்கு ஆளாகிக் கிடக்கிருர்கள்.

சென்னைப் பல்கலைக்கழகத்தில், தமிழ்ப் புலமை எய்த விரும்பிப் படிப்பதற்குக் கூட சமஸ்கிருதம் கட்டாயப் படுத்தப்பட்டிருந்தது சில ஆண்டுகட்கு முன். தமிழுக்கு அமைக்கப்பட்டிருந்த அந்தத் தடைக் கல்லை, தமது விடாமுயற்சியால் தகர்த்தெறிந்த பெருமை, தமிழ்ப் பேராசிரியர் கா. நமசிவாய முதலியார் அவர்கட்கே உரியதாகும். இல்லையேல் தனித்தமிழ் படித்தவர்கள் தொகை இந்த அளவு பெருகி இருக்க முடியாது! தமிழ்ப் பற்றும் தழைத்திருக்காது!

மேலும், தனித்தமிழ் நடை, மறைமலை அடிகளாரின் கொள்கையால் ஆக்கம் பெற்றுத் தழைத்தது. தமிழ்ப் பேராசிரியர்களான, மறைமலை அடிகளாரும், பரிதிமாற் கலைஞரும், தமது வடமொழிப் பெயர்களை நீக்கித் தமிழ்ப் பெயர் கொண்டமையால் தோன்றிய நல்லுணர்ச்சி, தமிழ் மக்கள் தங்கள் பெயரைத் தனித்தமிழில் அமைத்துக் கொள்ளவும், வடமொழியில் அமைந்திருப்பின் மாற்றிக் கொள்ளவும் தூண்டுகோலாயிற்று. தனித்தமிழ் இயக்கம் வளரத் தொடங்கியது. அவ்வியக்கத்தையும், மொழி வளர்ச்சியின் பெயராலும், பார்ப்பனர் பேச்சு நடையான கொச்சை மொழியையே கைக்கொண்டு தமிழ் மொழியையே அக்ரகார ஆதிக்கத்திற்கு உட்படுத்தும் மறுமலர்ச்சி நடையின் பெயராலும், எதிர்த்தனர் பலர். இன்றும் வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் 'தமிழ் மொழி தனித்து வளர முடியாது' என்ற வரட்டு வாதத்தை அவர்கள் கூறிக்கொண்டுதான் வருகிருர்கள்!

மற்றும் தமிழ்மொழியின் இயல், இசைத் துறைகளில் ஏற்பட்ட மறுமலர்ச்சி நாடகத் துறையிலும் விளைந்தது. நாட்டில் நிகழும் நாடகங்கள் எல்லாம், பெரும்பாலும், புராணப் பழங்கதைகளாகவே இருந்தன. ஏதேனும், ஓரிரு நாடகங்களே சமூகச் சித்திரங்களாகக் காணப்படும்.

அவையும் சீர்திருத்தத்தை வலியுறுத்துவதில்லை. நாடகப் பேராசிரியர். சம்பந்த முதலியாரின் நாடகங்களில் சில சீர்திருத்த நாடகங்களாக அமைந்திருப்பினும், அவற்றிற்கு முக்கியத்துவம் ஏற்படவில்லை. அந்நிலையில், நாட்டைச் சீர்திருத்துவதற்கு நாடகமே சிறந்த கருவி என்பதைக் கண்டு, அத்துறையில் ஈடுபட்டு, நாடகங்கள் எழுதித் தாமே நடிக்கவும் முன்வந்த அறிஞர் அண்ணாதுரை அவர்களால்தான், சமூகச் சீர்திருத்த நாடகங்கள் செல்வாக்குப் பெற்றன. இன்ருே, அவையே நடைபெறும் நாடகங்களில் பெரும்பாலனவாகத் திகழ்கின்றன.

அந்நாடகங்களே திரைக் கதைகளிலும் மறுமலர்ச்சி விளைவித்தன என்பது உண்மையாகும். அதற்கும் எதிர்ப்பு முளைத்தது. எனினும் விரைவில் அழிந்தது. ஆனல் இன்றுள்ள அரசாங்கமே-இந்த மறுமலர்ச்சியைத் தடுக்கும் விதத்தில் தன்னுலியன்ற திருப்பணியைச் செய்ய முனைந்துள்ளது!

ஆம், இந்த எதிர்ப்புக்கள் ஏற்படத்தான் காரணம் என்ன? அவை, பெரும்பாலும் பார்ப்பன வட்டாரத்திலிருந்தே கிளம்புவது ஏன்? இந்த நாட்டில் நிலைத்துள்ள வைதிகக் கொள்கைகளும், பார்ப்பனர்களின் தனிச் செல்வாக்கும் அழிந்துவிடுமோ என்ற அச்சமும் ஐயமுமே அதற்குக் காரணமாம்.

பொதுநிலையங்களில் தனி இடம், தனித் தண்ணீர்ப் பானை, மாணவர் விடுதிகளில் தனி இடத்தில் உணவு, கோவில்களில் அர்ச்சகர் ஆகும் உரிமை, முதல் இடம், இலவச தர்மச் சோற்றுக்குத் தனி உரிமை, சமஸ்கிருதத்திற்குத் தனிப்பாடசாலை, என்பனபோன்ற நூற்றுக்கணக்கான சலுகைகளைப் பெற்றிருப்பதும், அவையே, வாழ்க்கைத் துறைகள் யாவற்றிலும், தாம் உயர்வு பெறுவதற்கு அமைந்த ஏகபோகப் படிக்கட்டுக்களாக இருப்பதுமே அவற்றிற்கு ஆட்டம் கொடுக்கக் கூடிய எத்தகைய முன்னேற்றக் கருத்தையும், பார்ப்பனர்கள் எதிர்க்கக் காரணமாம். சூழ்நிலையை மாற்றக் கூடிய எதையும் அவர்கள் ஒரு நாளும் எதிர்க்காமல் இருந்ததில்லை, இருக்க

மாட்டார்கள்! மற்றவர்களோ, தங்கள் மொழி கலை நாகரிகப் பண்பாட்டை, ஆரியத் தொடர்பால் அழிந்துபோய் விடாமல் பாதுகாக்க வேண்டும் என்பதைக்கூட உணராதவர்களாகவே உள்ளனர்!

இந்நிலையில் உள்ள பொதுமக்கள், தம்மை உணர்ந்து காத்துக் கொள்ளவே இன உணர்ச்சி கொள்வது இன்றியமையாததாகும் என்று கண்டனர், நீதிக் கட்சியார். அந்த இன உணர்ச்சியோடு செயலாற்றத் தொடங்கிய போதே, மொழி, கலை, சமுதாய எண்ணம் ஆகியவற்றில் மறுமலர்ச்சி விளையலாயிற்று. அம்மறுமலர்ச்சி மாணவர் உலகையும் கவர்ந்தது. அதுகாறும் இந்தி எதிர்ப்பு, தனித் தமிழ்ப் பாதுகாப்பு, ஆகியவற்றிலே மட்டும் ஆர்வம் கொண்டிருந்த மாணவர்கள், சுயமரியாதையோடு, திராவிட இனப்பற்றும் கொள்ளலாயினர். மாணவர்களின் அந்த எழுச்சி, இயக்கத்தின் மறுமலர்ச்சிக்குக் காரணமாக அமைந்த அறிஞர் அண்ணாவின் 'திராவிட நாடு' இதழால் ஓங்கிற்று. அண்ணாவின் எழுத்தும் பேச்சும், மாணவர்கள் பலரை இயக்கப் பணியில் ஈடுபடச் செய்தது. அக்காலத்தில் இயக்கத்தில் ஈடுபட்டவர்களே நண்பர்கள் நாவலர் நெடுஞ்செழியன், மதியழகன், ஜனார்த்தனம், அர்ச்சுனன், தவமணி, இளம்வழுதி முதலியோரும் நானும் ஆவோம்.

அப்பொழுது நிகழ்ந்த மேடைப் பேச்சுக்களில், வடவர் ஆதிக்கம் கூடாது என்று வலியுறுத்தப்பட்டு வந்தது. அதை ஒட்டி, வடவர் வெற்றியைச் சித்தரிக்கும் இராமாயணமும் கண்டிக்கப்படலாயிற்று. இராமாயணம், அரசியலில் வடவர் வெற்றிக்கும், மொழி, கலைத் துறைகளில் வடமொழி ஆதிக்கத்திற்கும், சமூக நிலை விளக்கத்தில் வடவரின் உயர்வுக்கும், மதத்துறையில் ஆரியரின் ஆதிக்கத்திற்கும்-பல்வாறு வழிசெய்ததை அறிந்தபோது, இராமாயணத்தை மக்கள் வெறுக்கும்படிச் செய்யவேண்டும் என்பது உறுதி பெற்றது. அதன் பயனாக 'இராமாயணத்தைக் கொளுத்துவோம்' என்ற முழக்கமும் பிறந்தது. அதனால் 'வாதங்களும்' நிகழ்ந்தன. வெற்றியும் கிடைத்தது. அத்துடன், மற்ற புராணங்களும் கண்டிக்கப்பட

லாயின. பொதுவாகப் புராணக் கருத்துக்களுக்கு இருந்த பொருளற்ற செல்வாக்குப் புகைந்துபோயிற்று. அந்தப் புராணங்களிலே பற்றுடையாராய் அவற்றை அழியாமல் காக்க விரும்புவோருங்கூட, அவை கலைக்காகவாவது இருக்கட்டும், அவற்றுள் கிடைக்கும் சில வரலாற்று உண்மைகளுக்காகவாவது இருக்கட்டும், என்று புராணக் கருத்துக்களைக் கைவிட்டு, மற்றவற்றையே வலியுறுத்தும் நிலை ஏற்பட்டது. மறுபடியும் இக்காலத்திலேதான், ஆளவந்திருக்கும் அடியார்கள், புராணங்களுக்குப் புதுமெருகு தீட்ட முயல்வதைக் காண்கிறோம்! மெருகு நிலைத்தா நிற்கும்?

பல துறைகளிலும் மறுமலர்ச்சி விளைந்தது போன்றே கட்சிப்பெயரிலும் மாற்றம் ஏற்பட்டது. 1944-ஆம் ஆண்டில், சேலத்தில் பெரியார் தலைமையில் நடைபெற்ற மாநில மாநாட்டில்தான், தெ. இ. ந. உரிமைச் சங்கம் என்னும் நீதிக்கட்சி, அறிஞர் அண்ணாவின் தீர்மானப்படி 'திராவிடக் கழகம்' எனப் பெயர் மாற்றம் பெற்றது. நீதிக்கட்சி தனது பண்பை இழக்காமலே, மக்கள் உரிமையைத் தாங்கி நிற்கும் திராவிடக் கழகமாயிற்று.

பட்டம் பதவிப் பிரியர்களையும், கவர்னர் கைலாகுக்குக் காத்துக்கிடந்த கனங்களையும், தேர்தல் துந்துபிகளையும், 'சரிகைத் தலைப்பாகைகளையும் 'சேலம்' வெளியேற்றியது. பொதுமக்களின் உழைப்பால் உருவான மாளிகையில் பொதுமக்களே குடியேறத் தொடங்கினர் சேலத்தில்.

மாளிகை வாசிகளும், மதோன்மத்தரும், மடாதிபதிகளும், மதிற்சுவர் பூனைகளும், அரசியல் எத்தர்களும், ஆரியத்தரகர்களும் அஞ்சுமளவுக்கு அஞ்சா நெஞ்சர்களைத் தொண்டர்களாகக் கொண்ட திராவிடக் கழகம் வளரலாயிற்று.

வீரர் கூட்டம், மக்கள் இழிவைத் துடைப்பதற்கு அடையாளமாகக் கருப்புச்சட்டை அணிந்தது. மாநாடுகளும் கூட்டங்களும் மக்கள் ஆதரவைப் பெற்றன. கருஞ்சட்டை வீரர்களின் அணிவகுப்பைக் கண்டு மருண்டனர்

மாற்றூர். மதியிழந்து மனங் கொதித்த மாற்றூர், மதுரை மாநாட்டுக் கொட்டகையிலே நடுப்பகலிலே, தமது வயிற் றெரிச்சலை நெருப்பாகக் கொட்டித் தீமூட்டினர். அவர் கள் மூட்டிய தீ, அன்று இலங்கையை எரித்த தீயை நினைவூட்டிற்று. தீ, கொட்டகையைப் பொருளைத் தான் எரித்தது. அன்று இலங்கையில் மூட்டிய தீ இன்றும் மக்கள் மனத்தில் அழியாத நெருப்பாக இருப்பதுபோலத் தான், மதுரைத் தீயும் மக்கள் மனத்தினின்றும் மறைய வில்லை. மக்கள் மனத்தில் கிடந்த தன்னுணர்வுக் கொள் கைகள், தணலில் இட்ட தங்கமாயின, சுடச்சுட ஒளி சிறந் தன. அவர்கள் மூட்டிய தீ, கருஞ்சட்டையை எரித்தது எனினும் தோழர்களின் உடலையே தீய்த்துக் கருப் பாக்கி விட்டது, அடையாளமே தேவை யில்லாதபடி. கொள்கை உரம் வளர்ந்தது; தீயோரின் தீயினல் தீய்ந்து விடவில்லை.

வைதீக வெறியும், தேசிய மயக்கமும் விளைவித்த இன்னல்கள் பலப்பல. கல்லும், கம்பும், கடப்பாறையும் கட்கமும், சோடாபாட்டிலும், திராவகமும், மரமும் குளமும் இருளும் மறைப்பும், சதியும் சூழ்ச்சியும், காலியும் கூலியும் ஆகிய பலவும், கைக்கொள்ளப் பட்டன வளரும் கிளர்ச் சியை ஒடுக்க. அவற்றிற்காளாகிக் கண்ணிழந்து குருடா ஞேர், காலொடிந்து நொண்டியாஞேர், கையிழந்து முட மாஞேர், செவிடாஞேர், ஊனமாஞேர் பலர். வாழ்க்கை நலம் கெட்டவரும், பொருள் இழந்தவரும் பலப்பலர். உயிர் இழந்த உத்தமரும் உளர். உடையார்பாளையம் ஆசிரியர் வேலாயுதம் அவர்களின் உயிரையே உறிஞ் சினர் அக்கொடியோர். எனினும் வளர்ந்து கொண்டு தான் வருகிறது உரிமை உணர்ச்சி.

அப்படிப்பட்ட காலத்தில்தான், புதிய கட்சி ஏடுகள் பெருகின. இயக்கக் கொள்கைகளிலே பல, மாற்றுக் கட்சியினராலும் மதிக்கப்பட்டன. புதிய பேச்சாளர்களும் எழுத்தாளர்களும், கலைஞரும், நடிகரும், ஆசிரியர்களும், மாணவர்களும் எனப் பல திறத்தினரும் இயக்கத்தில் ஈடுபட்டார்கள். அவர்கள் எல்லோரையும் குறிப்பிடுவது எளிதுமல்ல, இயல்வதுமல்ல. அவர்களுள் இன்றும் சிறப்

புடன் குறிப்பிடும்படியாகப் பணியாற்றி வருபவர்களே தோழர்கள், கலைஞர் மு. கருணாநிதி, தளபதி. ஈ. வி. கே. சம்பத், விருதை வீரர். ஏ. வி. பி. ஆசைத்தம்பி, நடிப்புப் புலவர். கே. ஆர். இராமசாமி, நடிகமணி. டி. வி. நாராயணசாமி, பூ. கணேசன் எம். ஏ., இளஞ்செழியன் (போர்வாள்) அரங்கண்ணல், புலவர். ஏ. கே. வேலன், திருமதி சத்தியவாணிமுத்து முதலியோர் ஆவர். திராவிட மாணவர் கழகமும் அக்காலத்திலேயே ஆக்கம்பெற்று வளரலாயிற்று.

அந்நிலையில் 1947 ஆகஸ்டில், இந்தியா வெள்ளையரிடமிருந்து விடுதலை பெற்றபோது, திராவிடக் கழகத்தில் கருத்து வேறுபாடும் விளைந்தது. அந்த நாளைத் துக்க நாளாகக் கொள்ள முனைந்தார் பெரியார். அது, வரலாற்று நிகழ்ச்சியை மறுப்பதும், பொது உணர்ச்சியை அவமதிப்பதும் ஆவதால், அப்போக்கு வேண்டாமெனக் கேட்டுக் கொண்டார் அண்ணா. பெரியார் இசைய மறுத்ததால், 'அந்நாள் விடுதலை நாளே' என்ற தமது கருத்தைச் சான்று காட்டி வெளியிட்டார் அண்ணா. கழகம் மாறுபாட்டுக்கு இடமாயிற்று. இளைஞர்கள், அண்ணாவின் கருத்தையே ஆதரித்தனர். கருத்து மாறுபாட்டையும் தாங்கி நிற்கும் ஆற்றல் பெற்றது திராவிடக் கழகம். மேலும், 'துக்கநாள்' என்று மட்டுமே பேசப்பட்டிருந்தால் ஏற்பட்டிருக்கக் கூடிய பெரிய நெருக்கடியும், அண்ணா விளைவித்த கருத்து வேற்றுமையால் தவிர்க்கப்பட்டது.

அடுத்தாற்போல், அண்ணாமலை நகரில், திராவிடக் கழக மாணவர்களைத் தேசிய மாணவர்கள் தாக்கினர். கலகம் நடந்தது. வழக்கும் தொடரப்பட்டது. 47-நவம்பரில் தான்—உடையார்பாளையம் வேலாயுதம் படுகொலை செய்யப்பட்டார். கழகத்தினர் இன்னல் பலவற்றைத் தாங்கிக் கொண்டனர். உத்தமர் காந்தி அடிகள் 30-1-48ல் கோட்சே என்ற மராட்டியப் பார்ப்பனனால் கொலை செய்யப்பட்டார். செய்தியறிந்து துடித்தது திராவிடம். என்றாலும்-வகுப்புக் கலவரத்திற்கோ, கொடுமைக்கோ இடமேற்படாமல் பொறுமை கொள்ளச் செய்தது திராவிடக்கழகம். அதற்குப் பரிசளிப்பது போல், 'ஆளவந்தார்' - 2-3-48-ல்

கருஞ்சட்டைப் படைக்குத் தடை விதித்தனர். படையாக இல்லாத அமைப்பைத் தடை செய்தால், தடையா வெற்றி பெறும்? எனவே தடை தளர்ந்தது. கருஞ்சட்டை மாநாடே நிகழ்ந்தது. அதுகாறும் கழகத்தில் இருந்த தாகக் கருதப்பட்ட வேற்றுமையும், மறைந்தது.

இயக்கத்தின் வளர்ச்சியைப் பொருத அரசாங்கம், தடைச் சட்டங்களை வீசத் தொடங்கிற்று. இராவண காவியம் பறிமுதல், போர்வாள், இரணியன் நாடகங் களுக்குத் தடை, கூட்டங்களுக்குத் தடை என்று கணை கள் பாய்ந்தன. கழகம் கணை பாய்ந்த வேழமாயிற்று.

இங்கிலையில், ஆளவந்தார் இந்தியைக் கட்டாய பாட மாகப் புகுத்தத் தீர்மானித்தனர். அதைக் கண்டிக்க இந்தி எதிர்ப்பாளர் மாநாடு நடைபெற்றது. மறைமலை அடிகள், திரு. வி. க. பெரியார், அண்ணா முதலியோர் போர் முழக்கம் செய்தனர். அடுத்து மாணவர் மாநாடும் இந்தி எதிர்ப்பை முழங்கிற்று. அரசாங்கம் எச்சரிக்கையை உணரவில்லை.

பின்னரே, அண்ணா தலைமையில் அறப்போர் தொடங் கப் பெற்றது. பலவிதமான அடக்கு முறைகளும் கொடுமைகளும் தாண்டவமாடின. இடையில், கவர்னர் ஜெனரலாக அமர்ந்த ஆச்சாரியார் பவனி வரலானர். திராவிடக் கழகம் கருப்புக்கொடி காட்டத் தீர்மானித்தது. முதல் நாளே பெரியார் அண்ணா முதலிய 100-பேர் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டனர். என்றாலும் கருப்புக் கொடி காட்சியளிக்கத் தவறவில்லை. சில நாட் களிலேயே தலைவர்கள் விடுதலையாயினர்.

அடுத்து, கவர்னருக்குக் கருப்புக் கொடி வரவேற்பு நிகழ்ந்தது. அறப்போர் வளர்ந்தது. 144- தடைகள் மீறப் பட்டன. குடந்தையில் பெரியார் கைதானர். மற்றும் பலரும் சிறைப்பட்டனர். அங்கு நிகழ்ந்த அறப்போரில், வீர இளைஞர்கள் வேட்டையாடப்பட்டனர். குடந்தை தெருக்களில் திராவிடக் குருதி தேங்கிற்று. போலீசு கட்டவிழ்த்து விடப்பட்டது. திராவிடம் வீறிட்டெழுந்தது.

1948-அக்டோபரில், அறிஞர் அண்ணா தலைமையில், ஈரோட்டில் ஒரு சிறப்பு மாநாடு நடைபெற்றது. அம் மாநாட்டில், தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் 'இன்னும் 10-ஆண்டுகளில் திராவிடநாட்டை அடைந்தே தீருவோம்'' என்று முழங்கி, விளக்கங்கள் பல கூறித் திராவிட நாட்டுப் படத்தைத் திறந்து வைத்தார். அதனால் திராவிடநாடு இலட்சியம், மாற்றுக் கட்சியினரின் மதிப்பையும் பெற்றது எனலாம். அதற்கு முன்பே 1947-ல் கடலூரில் நடைபெற்ற மாநாட்டிலும் தமிழ்ப் பெரியார் அவர்கள், திராவிட நாட்டு உரிமையை, பிரிவினையை ஆதரித்தார்கள். அம்மாநாட்டில், வகுப்புரிமைத் தந்தை S. முத்தையா அவர்களும் திராவிடத்தின் விடுதலையை வலியுறுத்தினார்கள். இவ்வாறு இயக்கமும் இலட்சியமும், நாட்டுப் பெரியோர்கள், நல்லறிஞர் நாவலர் ஆகியோரின் ஆதரவைப் பெற்று வளரலாயிற்று.

இந்நிலையில்தான், திராவிடத் தந்தை பெரியார் அவர்கள், எவரும் எதிர்பார்த்திருக்க முடியாத ஒரு புது முறை "ஏற்பாட்டை'' அந்தரங்க நண்பர் ஆச்சாரியார் ஆலோசனையும் பெற்று நிறைவேற்றினார். பொதுமக்கள் கேலிக்கு முன், இயக்கத் தோழர்கள் தலை கவிழும் நிலை பிறந்தது. மனக்கொதிப்பு கண்ணீராகச் சிந்தியது. உயர்ந்த கோபுரத்தில் இருந்து உருண்டுவிழும் நிலைக்கு ஆளாகியது கழகம். கண்ணீரைச் சிந்தியோர், தலைவருக்கு வேண்டுகோள் விட்டும் பயன்படவில்லை. மாறாக, வசையும் பழியுமே கிளம்பலாயிற்று. எனவே, எவ்வகையாக நோக்கினும், (உண்மைத்) தொண்டர்கள் தலைவரைவிட்டு விலகுவதைத் தவிர்த்து வேறுவழி தோன்றவில்லை. எனவே தான், கண்ணியர்கள் ஒன்றுகூடி, அறிஞர் அண்ணாவையே வழிகாட்டியாக இருக்கக் கேட்டு, தனி அமைப்பு காணலாயினர். அண்ணாவோ, கடமையைக் கருத்திலிறுத்தி, இளைஞர்களை ஆத்திரம் கொள்ளாமல் தடுத்து அறிவுப்பாதை காட்டி, கண்ணியம், கட்டுப்பாடு என்ற கவசம் அளித்து, திராவிடர்தொண்டுப்படை இடையிலே தளர்ந்து அழிந்துவிடாமல், இலட்சியம் நோக்கி நடக்கச் செய்தார். படை, பரணி பாடியபடி நடக்கிறது இந்நாள்.

1949-செப்டம்பர் 17-ஆம் நாள், காரிருள் மூடிக் கொண்ட திராவிடத்தில் முழுநிலவு என்று மகிழும்படி, திராவிட முன்னேற்றக்கழகம் தோன்றி அறிவொளி பரப்பலாயிற்று. அறிஞரின் தலைமையில், நாவலர்களும், கலைஞர்களும், தளபதிகளும், தொண்டர்களும், தாய்மார்களும், மாணவர்களும் பணியாற்ற நாடு நகரங்களிலும், பட்டி தொட்டிகளிலும் கிளைகொண்டு, தழைத்துள்ளது தி. மு. கழகம். மக்கள் மனத்தில் அருகுபோல் கொள்கை வேர் விட்டு, மக்கள் மன்றத்தில் ஆல்போல் அமைப்புக்கள் தழைத்து, தொண்டென்னும் நிழல் செய்து நிற்கிறது தி. மு. கழகம்.

கடந்த நான்காண்டுகளாகத் தி. மு. கழகம் பலதுறைகளில் பணியாற்றியுள்ளது. பேச்சுரிமை, எழுத்துரிமை, நாடகம் நடத்தும் உரிமை, கூட்டம் கூட்டும் உரிமை, மொழிஉரிமை, வகுப்புரிமை முதலிய பல அடிப்படை உரிமைகளுக்காகத் தி. மு. கழகம்போராடி வந்திருக்கிறது. 144-தடைகளை மீறிக் கூட்டம் நடத்தி, சிறைத்தண்டனை பெற்றவர் பலர். ஏடு எழுதியது காரணமாகப் பொதுச் செயலாளர் அண்ணா அவர்களையே சிறைக்கனுப்பி வைத்து, தி. மு. கழகம் தனது கொள்கை உறுதியை நிலை நாட்டிக்கொண்டது. அத்தகு உரிமைகளுக்காகவே, தோழர்கள் என். வி. நடராசன், ஏ. வி. பி. ஆசைத்தம்பி காஞ்சி. கல்யாணசுந்தரம் ஆகியோரும் சிறைத் தண்டனை பெற்றனர்.

மற்றும், உரிமைக் குரல் வளர வளர. அடக்குமுறைகளும் வளர்ந்தன. தடியடி, கண்ணீர்ப்புகை, துப்பாக்கிப் பிரயோகம் முதலிய கொடுமைகள் நிறைந்தன. தேசிய வாதிகள், பலாத்காரத்தில் ஈடுபட்டனர். தேனியில், தேளெனக் கொட்டினர். பலவிடங்களில் மறைந்து தாக்கினர். தாக்குண்டவர், கைகால் ஒடிந்தவர் பலராயினர். தேசிய வெறிப்பாய்ச்சலுக்கு ஆளாகித் திராவிட வீரர்களில் சிலர் உயிரும் இழந்தனர். நெல்லிக் குப்பம், அப்துல் மஜீது, வண்ணையம்பதி பாண்டியன் ஆகியோர் முன்னேற்றக் கழகத்தின் முன்னணியில் நின்றதற்காகத்தான் படு

கொலைக்கு ஆளாயினர். என்றாலும் இயக்கம் தேயவில்லை, மாறாக வளர்ந்தது, வளருகிறது. தியாகம் வீண்போகுமா?

அச்சமயத்தில், திராவிடக் கழகம், இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை, வடநாட்டுச் சுரண்டல் எதிர்ப்பு மறியலாக நடத்தலாயிற்று. ஏனோ, அம்மறியல் பின்னர் நிறுத்தப் பட்டது. திராவிட முன்னேற்றக் கழகம், மத்திய ஆட்சிப் பீடத்தினின்றும் வலம்வருகின்ற அமைச்சர்கட்கெல்லாம், வடநாட்டு ஆதிக்கத்தை எதிர்ப்பதற்கு அடையாள மாகக் கருப்புக்கொடி காட்டத் தீர்மானித்தது. அவ்வாறே, திவாகர் திகைக்க, மேதாப் மலைக்க, ஆச்சாரியார் கலங்க, கருப்புக்கொடி எழுந்தது, வளர்ந்தது. இந்தி ஏகாதிபத்தி யத்தை எப்படியும் அழித்தே தீருவோம் என்பதற்கு அடையாளமாக, ரயில்வே நிலையப் பெயர்ப் பலகைகளின் தலைப்பில் எழுதப்பட்டுள்ள இந்திப் பெயரை அழிக்கும் கிளர்ச்சி தொடங்கப்பட்டது. அக்கிளர்ச்சி, ரயில்வே பலகைகளில் உள்ள இந்தி எழுத்துக்களை மட்டுமன்றி, அஞ்சல் நிலையங்களில் உள்ள இந்தியையும் அழிக்குமள வுக்கு வெற்றிபெற்றது. டில்லி ஆதிக்கத்தின் முகத்தில் 'தார்' பூசப்பட்டது.

மற்றும், வகுப்புரிமை நீதி, (கம்யூனல் ஜி. ஓ.) சில வன்னெஞ்சரின் சூதுமதியால் அரசியல் நிர்ணயச் சட்டத் தின் மூலம் வீழ்த்தப்பட்டபோது, அக்கொடுமையை எதிர்த்து நிகழ்ந்த பெருங்கிளர்ச்சியில், தி. மு. கழகமே முன்னின்றது. பள்ளி இறுதி வகுப்பில் வடிகட்டும் முறையைப் புகுத்தியபோதும், அது பிற்பட்ட வகுப்பா ருக்குச் செய்யப்படும் அநீதி என்பதை மாணவர்கள் கிளர்ச்சி மூலம் எடுத்துக் காட்டியது.

கைத்தறி நெசவாளர் கண்ணீர் மாற்ற, ஒவ்வொரு திராவிடனும் கைத்தறி ஆடையே கட்டுதல் வேண்டும் என்று கேட்டுக்கொண்டதோடு, கடந்த ஜனவரி 4-ல், ஊர்கள் தோறும், தெருத் தெருவாகக் கைத்தறித் துணி விற்பனை நடத்தி, கைத்தறிக்கே ஆதரவு பெருக்கினர் தி. மு. க. தலைவர்கள்.

தஞ்சை, திருச்சி மாவட்டங்கள் புயலுக்கு இரை யாகியதால், விளைந்த தாங்கொணாத் துயரத்தைக்

குறைக்க, அரிய முயற்சி செய்து நிதி திரட்டி, ரூபாய் இருபத்தி ஐயாயிரத்துக்குக் கைத்தறித் துணியாக வாங்கி, அரசாங்கத்தின் மூலமே ஏழை மக்களுக்கு வழங்கச் செய்தனர்.

இவ்வாறு, இன உரிமைக்கும், மொழிப் பாதுகாப்புக் கும் எனத் தோன்றிய கிளர்ச்சி வளர்ந்து, அந்த உணர்ச்சி ஓர் உருப்பெற்று, தி. மு. க. என்ற அமைப்பாக நிலைத்து நாட்டுக்குத் தேவையான நற்றொண்டுகள் பலவற்றை ஆற்றி வந்துள்ளது.

அவைகட்கெல்லாம் முடி வைத்ததுபோல், முன் னேற்றக் கழகத்தின் முழுவலிவுக்கும் அடையாளமாக அமைந்ததே ஜுலை 15-ஆம் நாள்.

புதிய ஆரம்பக் கல்வித் திட்டம், பிற்பட்ட வகுப்பு மக்களுக்குப் பெருந்தீமையாகும். எனவே, புதுமுறை யைக் கைவிடவும் என்று கேட்டுப் பார்த்தும் பயனின்மை யால் விளைந்தது அக்கிளர்ச்சி.

தமிழரின் உரிமையை அவமதித்து, அவர் தம் அறப்போரை—'நான்சென்ஸ்' என்று குறிப்பிட்டது தவறு என்பதை உணரச்செய்வதற்காகத் தோன்றியது அக்கிளர்ச்சி.

வடநாட்டுப் பண முதலாளியின் பெயர்—எழில்மிக்க தமிழ் நாட்டின் அவமானச் சின்னமாக இருப்பது கூடாது என்பதால் பெருகியது அக்கிளர்ச்சி.

நாள் குறிப்பிடப்பட்டது. அண்ணாவின் ஆணை பிறந் தது. தளபதிகள் முன்னின்றனர். ஆயிரமாயிரம் வீரர்கள் அணிவகுப்பாயினர். அறப்போர் — அறப்போர் என்ற முழக்கம் வானளாவியது. ரயில் நின்றது. துப்பாக்கிகள் முழங்கின. அறுவர் பிணமாயினர். பலர் படுகாய முற்ற னர். தலைவர்களை விழுங்கிய சிறைப்பேய் வாய் திறந்த படியே — மற்றும் பல்லாயிரவரை விழுங்கியது. வழக்கு கள் வளர்ந்தன. நீதி—தண்டனையை விதித்தபடி இருந் தது, இருக்கிறது. 'உரிமைக்குரல்' தண்டிக்கப்படு கிறது. என்றாலும் ஒடுங்கவில்லை.

தலைவர்கள் சிறையினில், என்றாலும் வெளியிலே உணர்ச்சி மங்கவில்லை என்பதை, பண்டித நேருவுக்கு நேராக உயர்த்தப்பட்ட கருப்புக் கொடிகள் உணர்த்தத் தவறவில்லை.

கருப்புக் கொடி சிறியது. ஆனால் அதை ஏந்தியுள்ள வர்களின் கூட்டம் பெரியது. அதைவிட மிகப்பெரியது அவர்களைப் பிரதிநிதிகளாக அனுப்பி வைத்துள்ள இந்த நாட்டுக்குரிய திராவிட இனம். இந்த உண்மையை உணர வேண்டும் கருப்புக்கொடி காண்பவர்கள்.

தி. மு. க. இப்பொழுது ஒரு கட்சியல்ல; இயக்கம், மக்கள் சக்தி என்று கூறவேண்டிய நிலை பெற்றுவிட்டது. மக்களையும்—தி. மு. கழகத்தையும் பிரித்துப் பார்ப்பது பேதமையேயாகும்.

அத்தகைய வலிவு பெற்றுவிட்டதைக் கண்டு, ஆத்திரப்பட்டு, பின்புறமாக வந்து தாக்குதலும், வகுப்புக் கலவரத்தைத் தூண்டுதலும், அதனால் தோன்றக்கூடிய பலாத்காரத்தைக் காரணமாகக் காட்டிக் கழகத்தையே ஒழித்துவிட எண்ணுவதும், வஞ்சக நரித்தந்திரத்திற்கு எடுத்துக்காட்டாகலாமே தவிர, நினைக்கின்ற பலனைத் தாராது. உரிமை இயக்கம் அழியாது! அழிக்க எவராலும் முடியாது! அழிக்க நினைப்பவர் அழியாமல் இருப்பதும் இயலாது!

உண்மையில், ஜூலை 15, திராவிடத்தின் விடுதலை நாள்! திராவிடரின் தியாக நாள்! மொழி ஆட்சிக்கு, கலைமீட்சிக்கு, பண்பாடு பாதுகாப்புக்கு, நாகரிக நல்வாழ்வுக்கு வழிகாட்டிய நாள்! இன உரிமைக்கும், வகுப்பு நீதிக்கும், துணையான நாள்! திராவிட மக்களின் எதிர்காலத்தை ஒளி செய்யும் ஒப்பற்ற நாள்!

அந்த நாளைக் குறித்த, தி. மு. க.வின் தொண்டால் தன்னுணர்வு பூத்து, இன எழுச்சி காய்த்துள்ளது. திராவிடநாடு கனியும் என்பதில் ஐயமில்லை. அக்கனி, சமத்துவ நிறங்கொண்டு, சகோதரத்துவ மணம் வீசி, சமதர்மச் சுவை நல்கும் என்பதும் உறுதி. அன்று அண்ணல் தியாகராயரின் நல்லெண்ணத்தில் அரும்பிய குறிக்

கோள், இடையில் பெரியாரின் உழைப்பில் மலர்ந்த கொள்கை, இன்று அண்ணாவின் அறிவாற்றலில் மணம் மிக்க திட்டமாகத் திகழ்கிறது.

காங்கிரஸின் தேச விடுதலை, நீதிக்கட்சியின் வகுப்புரிமை, தாய்மொழிப் பாதுகாப்பு, திராவிட இன உரிமை, திராவிடநாட்டு விடுதலை, பொருளாதார பேத நீக்கம் ஆகிய ஒவ்வொன்றும், காலமுறையிலேயே மக்களிடை இடம் பெற்று வந்துள்ளன. இவை ஒவ்வொன்றும் முதலில் சிறு சிறு கிளர்ச்சியாகவே தோன்றி வளர்ந்துள்ளன. இவற்றுள் பல, ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு, தனித்தனி பிரிக்க முடியாத ஒரு பெரு வடிவமாகத் திகழ்வதையும் அறிவது கடினமல்ல. அந்தப் பெருவடிவே, பேரிலட்சியமே, "திராவிடநாடு திராவிடருக்கே" என்பது. சிறு பொறி—பெருந் தீயாகி விட்டது. அணைந்து விடுமோ என்று எண்ணிய சிறு விளக்கு, இன்று பெருஞ்சுடராகிப் பேரொளி பரப்புகிறது.

அந்த இலட்சிய ஒளி நோக்கியே, பலப்பல கிளர்ச்சிகளும் நடைபெற்றபடி உள்ளன. தியாகப் பண்பும் வளர்கிறது. தொண்டுள்ளம் பூண்டோர் பெருகியபடி உள்ளனர்.

எனவேதான், எரிகிற அடுப்பில் ஏற்றிய பால் என, இனவுணர்வுப்பால் பொங்கும் திராவிடத்தில், திராவிட நாடு திராவிடருக்கு ஆகும் வரையில், இந்தக் கிளர்ச்சி ஓயாது, உறங்காது, ஒதுங்காது, சாகாது, — மாறாக எங்கும் பரவிப் பொங்கி வளரும்—வளரும் கிளர்ச்சியாகவே வாழும் எனக் கூறுகிறேன்! ஆம்! இது "வளரும் கிளர்ச்சி'! தளராது, தயங்காது "வளரும் கிளர்ச்சி"! என்பதைத்தான் எல்லோரும், எத்திறத்தினரும் உணர வேண்டுமென விரும்புகிறேன்!

வளர்க கிளர்ச்சி!

வாழ்க திராவிடம்!!

WRAPPER PRINTED AT SHANTI PRESS, MADRAS-1